உ

இருபதாவது குருமஹாசந்நிதானம்

ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள்

# இரண்டாவது குருபூஜை வெளியீடு



சிவபரிபூரணம்

# திருவிடைமருதூர்

விக்ருதி — பங்குனி — திருவாதிரை.

திருவாவடுதுறையாதீனவெளியீடு — 29.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்.



துறைசை

— ஸ்ரீ மாசிலாமணிதேசிக சுவாமிகள்

1953.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இரவும் பகலும்நின் பாதத் தலர்என் வழிமுழுதும்
பரவும் பரிசே அருளுகண் டாய்இந்தப்* பாரகத்தே
விரவும் பரமத கோளரி யேகுட வெள்வளைகள்
தரளஞ் சொரியுங் கடல்புடை சூழ்ந்த தராய்மன்னனே.

—நம்பியாண்டார்நம்பி.

திருச்சிற்றம்பலம்.



திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
20-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

திருவாவடுதுறையாதீனவெளியீடு—29.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மாசிலாமணிதேசிகமூர்த்திகள்

அருளிச்செய்த

# திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்.

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து

இருபத்தொன்றாவதுகுருமஹாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மூர்த்திகள்**

கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்

**தி. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்**

பலஏட்டுச்சுவடிகளைக்கொண்டுபரிசோதித்து

நூதனமாகஎழுதிய குறிப்புரைமுதலியவற்றுடன்

பதிப்பிக்கப்பட்டது.



நந்தன — பங்குனி — 1953.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்
பானு வாகிக் [ஞான
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ."

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

திருச்சிற்றம்பலம்.



இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# முகவுரை.

திருச்சிற்றம்பலம்.

" என்றும்அடியவர்உள்ளத்திருப்பனஇவ்வுலகோர்
நன்றுமலர்கொடுதூவித்துதிப்பனநல்லசங்கத்
தொன்றும்புலவர்கள்யாப்புக்குரியனஒண்கலியைப்
பொன்றுங்கவுணியன்சைவசிகாமணிபொன்னடியே"

— நம்பியாண்டார்நம்பி.

திருச்சிற்றம்பலம்.

தெய்வச் 'செந்தண்டமிழ்' மொழிக்குரியனவாகக் கூறப்படும் பிரபந்தவகைகள் தொண்ணூற்றாறு என்பர் பெரியோர். அவற்றுள், பிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தமும் ஒன்று. இது பிள்ளைப்பாட்டு எனவும் வழங்கும். இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ் பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இரண்டு வகைப்படும். 'இப் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தம் மூன்றும்மாதம் முதல் இருபத்தோராம மாதம் வரை ஒற்றித்த மாதமாகிய பத்து மாதங்களினும் கேட்பிக்கப்படும். அன்றியும், ஐந்தாம் ஆண்டினும் ஏழாம் ஆண்டினும் கேட்பினும் இழுக்காது' என்பர் வெண்பாப்பாட்டியலுடையார். இனி,

"பிள்ளைப் பாட்டே தெள்ளிதிற் கிளப்பின்
மூன்று முதலா மூவேழளவும்
ஆன்ற திங்களி னறைகுவர் நிலையே."
"ஒன்று முத லையாண் டோதினும் வரையார்."

என்பர் பன்னிருபாட்டியலுடையார். பாட்டுடைத்தலைவரைக் குழந்தையாகப் பாவித்துச் செவிலித்தாய் முதலியோர்

காப்பு முதலிய பத்துப்பருவங்களுக்கு ஏற்ற செயல்களை எடுத்துக் கூறிப் பாராட்டுவதாகப் புலவர் பெருமக்களால் புனைந்து பாடப்படுவது இப்பிரபந்தம். புலவர் பெருமக்கள் தாம் வழிபடு கடவுளையேனும், தமது ஞானாசிரியரையேனும் தம்மைப்பாதுகாத்து உலகுக்குப் பயன்படச்செய்த மகோபகாரிகளையேனும், அரசர்களையேனும் தமக்கு அவர் செய்த நன்றிக் கறிகுறியாகப் பாராட்டிப் பாடுவர். அக்கால நன்மக்களும், புலவர் பெருமக்களைப் பெரிதும் முட்டுப்பாடின்றிக் காத்து வருவதையே தாம்இன்றியமையாத கடைப்பிடியாகக் கொண்டொழுகி வாழ்ந்தனர். 'புலவா பெருமக்களைப் பாதுகாத்தலையும், அவர்களாற் பாராட்டப்படுதலையுமே தம் வாழ்நாளின் பயன்' எனக்குறிக்கொண்டு அழிந்துபடும் பொருட்செல்வத்தால் அழியாத புகழ்ச்செல்வத்தை நிலைநாட்டித் தாமும் அப்புகழ்ப்படாத்தால் போர்த்தப்பட்டு மேன்மையுற்றனர். அன்றும், இன்றும், என்றும் அழியாத பெருமையினையுடையார் அவரே யன்றோ? இதனை, "நகுதக்கனரே" என்னும் புறப்பாட்டில் "ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் தலைவனாக, உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற், புல்வர் பாடாது வரைகவென் னிலவரை" எனத் தலையாலங்கானத்துச் செருவென்றபாண்டியன்நெடுஞ்செழியன் தான் வஞ்சினங் கூறிச் செஞ்சொற்புலவரால் பாடப்படும் சிறப்பை நம் செந்தமிழகத்து நன்மக்கள் நன்கு உணர்ந்துபோற்ற வைத்தமை காண்க.

"ஈதல் இசைபட வாழ்தல் இதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு" என்பது திருக்குறள்.

இனி,

"மக்கண்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்ட லின்பம் செவிக்கு"

என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார். தீண்டல் உடற்கின்பமும், கேட்டல் செவிக்கு இன்பமும் விளைவித்தல் போல, இளம்பருவமக்கள் விளையாட்டைக் காண்டலும் கண்ணுக்கின்பமாம் என்பதும் இதனால் போதரும். இதனை, நமது ஆதீன குலதெய்வமாகப் போற்றப்பெற்றுவரும் திராவிட மாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் தாம் அருளிச்செய்த அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் அவையடக்கச் செய்யுளில் வைத்து "இளம்பருவ விளையாட்டை நோக்குழித் திருவுரு விடத்தாசை மிகுதி யுண்டாம்" என்று அருளினார்கள். இப்பிள்ளைக்கவி வித்தாரகவிக்கெல்லாம் முன்னுற இயல்வது என்பர். இஃது ஆசிரிய விருத்தத்தால் பாடப் படுவது.

இனி, இப்பிரபந்தம் புறப்பொருள் வகையாகிய பாடாண்திணையில் "குழவி மருங்கினுங் கிளவதாகும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தாற் கூறப்பட்ட காமப் பகுதியின்பாற்பட்டு மக்கட்குழவிக்குரியதாக வழங்கப் படும். ஆயினும், ஒரோவழித் தெய்வத்தோற்றமாகிய மக்கட்குழவியின் பருவத்தை ஆரோபித்தலால் அக்குழவி யோடு ஒற்றுமையுடைய தெய்வத்துக்கும் உரியதாக இது வழங்கப்படும் என்க.

இனி, பாட்டுடைத்தலைவராகிய 'குழந்தையைப்பாது காத்தல் வேண்டும்' எனத் தெய்வங்களை வேண்டி அமைப் பது இந்நூற் காப்புப்பருவத்தின் இயல்பு திருமால் காத்தற் கடவுள் ஆகலின் இப்பருவத்திலே முதற் செய்யுளாக அவருடைய காப்பு அமைக்கப்பெறும். இது தொன்று தொட்ட மரபு. குழந்தைபிறந்த ஏழாம்நாள் காப்பிடுதல் என்ற வழக்கத்தையொட்டி இஃது இலக்கியவழக்கிலே

அமைந்தது போலும் பருவ விளக்கங்கள் அவ்வப்பருவங்களின் குறிப்புரையிலே விளக்கப்பட்டுள்ளன: ஆண்டுக் காண்க. இனி,

"சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை — போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து." என்பது,

இப்பிள்ளைக்கவியுறுப்புக்களின் அடைவாம். 'காப்புத்தால் செங்கீரை' என முறைமாறியும் இது வரும் என்பர்.

"காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகவென் றன்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்"

என்பது பன்னிருபாட்டியற் சூத்திரம். இம் முறையில் வைத்தே ஆண்பாற்பிள்ளைத்தமிழ் அமைப்பர். பெண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதி மூன்றுஉறுப்புக்களையும் நீக்கி அம்மானை, நீராடல், ஊசல் ஆகிய மூன்றும் சேர்த்துப் பத்துப் பருவமாக்குவர். அம்மானைப் பருவத்தை நீக்கிக் கழங்காடலைக் கூறுவதும் உண்டு. இதனைச் சிவயோக நாயகி பிள்ளைத்தமிழிற் காண்க.

இத்திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழிலே காப்புப் பருவம் பண்டைமுறையில் அமைக்கப்பெறாமல் புதுவிதி யொன்றைக்கொண்டு இம்மகான் அருளிச்செய்திருக்கின் றனர். மகாகவிகள் எதனை அமைக்கின்றார்களோ அதுவே

விதியாகக் கடைப்பிடிப்பர் பிற்காலத்து ஆன்றோர். 'வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும் பெரு வழக்குக் கிழக்கு முண்டோ' என்பர் தாயுமானசுவாமிகள். இம் மகாகவி இப்பிள்ளைத்தமிழிலே காப்பாக—1. பரமீசர்—திருநீலநாயகி, 2. திருநீறு, 3. நடராசர் (கான்மாறியாடிய கடவுள்), 4 சிற்சத்தி, 5. விநாயகக்கடவுள், 6. முருகக் கடவுள், 7. திருப்பொய்கை, 8 பன்னிருதிருப்பெயர்ப் பழம்பதி, 9. திருப்பதிகம், 10. சட்டைநாதர், 11. மற்றைத் தெய்வங்கள் ஆகப்பதினொரு திருப்பாடல்களை அருளினர். மற்றைத்தெய்வங்களில்வைத்துத் திருமால், பிரமன், திக்குப்பாலகர், அருக்கர், உருத்திரர், மருத்துவர், கன்னியர் ஆகிய இவர் சேவித்து உடன் வருவர் எனக்கூறி யருளினர் பண்டையோர் காப்புப்பருவம் கொண்டமுறை வருமாறு:—

"திருமா லரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேன் முருகன் பருதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரர் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே"

என்பது பன்னிருபாட்டியல்.

இனி, அழகர் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் சாமி கவிகாளருத்திரர் காப்பும் அவையடக்கமும் கூறிப், பின்பு பழிச்சினர்ப் பரவல் என்னும் தலைப்பில் முதலாழ்வார் மூவர், பெரியாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், சூடிக்கொடுத்த நாச்சியார், மதுரகவியாழ்வார்,

எம்பெருமானார், வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள், ஞானாசிரியர், அடியார்கள் எனப் பதினைந்து பாடல்கள் கூறிப்பின் காப்புப் பருவம் தொடங்குகிறார். காப்புப் பருவத்தில் 1. திருமால், 2. திருமகள், 3 பிரமதேவர், 4. சிவபெருமான், 5. தேவேந்திரன், 6. ஆதித்தன், 7. விநாயகக் கடவுள், 8. முருகவேள், 9. வைரவன், 10. சத்தமாதர், 11. முப்பத்துமூவர் ஆகப் பதினொரு செய்யுட்கள் கூறப்பட்டுள்ளன.

இனி, அந்தகக்கவி வீரராகவ முதலியார் தாமியற்றியருளிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழில் 1. திருமால், 2 வன்மீகநாதர், 3 முத்துவாளியம்மை, 4. கங்காதேவி, 5. சித்திவிநாயகர், 6. சரவணப் பொய்கை, 7. வேலாயுதம், 8. வைரவக்கடவுள், 9. கார்த்திகைத்தாயர், 10. பிரணவப் பொருள் எனக் காப்புப்பருவத்தைப் பத்துச்செய்யுட்களால் அமைத்திருக்கின்றார்.

இனி, இவ்வாதீனத்து மஹாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் தாம் இயற்றியருளிய ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத்தமிழிலே பாயிரத்தில் வைத்து விநாயகவணக்கமும் குரு வணக்கமும் அவையடக்கமும் கூறிக், காப்புப் பருவத்திலேயுள்ள பதினொரு பாடல்களில் ஏனைப்பிள்ளைத்தமிழ்களிற் கூறப்படுவது போலத் திருமால் முதலியவர்களைக் காப்பாகக் கூறாமல், திருத்தொண்டர்களையே காப்பாகக் கூறத் தொடங்கி, அவர்களைத் திருத்தொண்டத் தொகைச் செய்யுள் முறைப்படி "தில்லை வாழ்ந்தணர்" முதல் "மன்னியசீர் மறைநாவன்" இறுதியாகவைத்துப் புதியதொரு அமைப்பைக் கற்பித்தனர். ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழில் விநாயக வணக்கம் கூறிக், காப்புப் பருவத்திலே 1. திருநந்திதேவர், 2. சனற்குமாரமுனிவர், 3. சத்திய

ஞானதரிசனிகள், 4. பரஞ்சோதிமுனிவர், 5. மெய்கண்ட தேவர், 6. அருணந்திசிவம், 7. மறைஞானசம்பந்தர், 8. உமாபதிசிவம் ஆகிய அகச் சந்தானகுரவர் நால்வர்— புறச்சந்தான குரவர் நால்வர் இவர்களுடன் 9. அருணமச்சி வாயர், 10. சித்தர் சிவப்பிரகாசர், நமச்சிவாய மூர்த்திகள் முதலியோர்களைக் காப்பாகக் கூறி வேறோர் புதிய அமைப் பையும் காட்டினர்.

இனி, பிள்ளைத்தமிழ் நூல்களில் பெரும்பாலும் பருவம் ஒன்றுக்குப் பப்பத்து ஆசிரியவிருத்தங்களாக நூறு செய் யுட்களே சந்த வேறுபாட்டுடன் பாடப்படுவன ஆயினும், ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் அருளிச்செய்த கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழில் பருவம் ஒன்றுக்கு ஐவைந்து பாடல்களே உள்ளன. சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்துக்கும் எவ்வேழு பாடல்கள் உள. பழனிப் பிள்ளைத்தமிழ் மும்மூன்று செய்யுட்களையேகொண்டு ஒவ்வொரு பருவமும் அமைந் திருக்கிறது.

இனி, சைவசமய குரவர்களுள் முதலாவது வைத் தெண்ணப்படும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் விஷய மாக உள்ள நூல்கள் பல. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் அருளிய திருத்தொண்டத் தொகையில் வைத்து அவர்களை "வம்பறு வரிவண்டு மணம்நாற மலரும் மதுமலர்நற் கொன் றையான் அடியலாற் பேணா, எம்பிரான் சம்பந்தன் அடி யார்க்கு மடியேன்" எனப் போற்றியருளினார்கள். நம்பி யாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியில் இரண்டு திருப்பாட்டுக்களை அருளிச்செய்து, தனியே ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடையபிள்ளையார் திரு மும்

மணிக்கோவை, ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை, ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடையபிள்ளையார் திருத்தொகை என ஆறு பிரபந்தங்கள் சுவாமிகளுக்கென அருளிச்செய்திருக்கிறார்கள். ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் திருத்தொண்டர் பெரிய புராணத்திலே திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணத்தை 1256-திருவிருத்தங்களால் அருளிச்செய்தனர். திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து எட்டாவது குருமஹா சந்நிதானம் ஸ்ரீமாசிலாமணிதேசிக சுவாமிகள் இப் பிள்ளைத்தமிழை அருளினார்கள். துறைமங்கலம்—ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தாம்அருளிய நால்வர் நான்மணி மாலையில் வெண்பா யாப்பில் வைத்துப் பத்துச் செய்யுட்களால் அவர்களைப் போற்றியருளுவாராயினர். மகாவித்துவான்—பிள்ளையவர்கள் மாணவருள் ஒருவராகிய ஸ்ரீவன்றொண்டச் செட்டியாருடைய மாணவர் காரைக்குடி — ஸ்ரீ சொக்கலிங்க ஐயா நால்வர் பிள்ளைத் தமிழ் நான்கு என்னும் தொகுப்பிலே திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் ஒன்றும் பாடியுள்ளார்கள். பிற்காலத்துப் புலவர்கள் 'நால்வர் பிள்ளைத்தமிழ்' என்னும் பெயரால் நால்வர் கூடிப் பருவம் ஒன்றுக்கு ஒவ்வொரு பாடலாகத் தனித்தனி பத்துப்பாடல்கள் இயற்றியிருக்கின்றனர். மற்றும், பாலகவி திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவடிகட்குப் பல பிரபந்தங்கள் செய்திருக்கின்றனர், தக்க யாகப்பரணியில் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரும் (கோயிலைப்பாடியது) திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் செய்திகளை யமைத்துத் தாழிசையால் பாடியுள்ளார். ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணத்திலேவைத்துப் பத்துப் பருவங்களைப் பாராட்டியருளியமையும் காண்க. (செ. 43—52).

இனி, இந்நூலாசிரியராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிக மூர்த்திகள் சைவசமய பரமாசாரியராகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் பெயரைப் பலபடியாக இப்பிரபந்தத்தில் வைத்துப் பாராட்டுகின்றார்கள். அவற்றுட் சில வருமாறு— கழுமலந்தார்பெருவாழ்வு, கவுணியன், சைவசிகாமணி, சம்பந்தப்பெருமான், தமிழ்க்களிறு, சிவராகவன், மதுர வாசகன். கலியடுசேவகன், கவுணியர்குலாதிபன், காழியுள் ஞானன், நான்மறைத்தலைவன், சீகாழிநாடாளி, பரசமயகுல காலன், புகலியராண்டகை, அருகர்குலாந்தகன், திருநாவுக் கரசர் சித்தத்தின் துணை, அமணர்குலசத்ரு, கலிக்கோபன், அருகர்குலபயங்கரன், குமரனன்புறுதுணைவன், அரன்மதலை, கயிலைமலையன்மகன், இறைவன்மகன், செந்தமிழ்விரகன், சண்பையாதிபன், வெங்குருவுடையகோன், காழிக்கரசு, புகலிப்பெருமான், சண்பைக்கரசு, உடையாளுடையகுல மகன், தமிழ்க்கரசு, தவமுனி, தெளிதமிழுரைத்தபெருமாள், கொச்சைநகரான், பசுந்தமிழாளி, பிரமாபுரத்ததிபன், கொச்சை முனி என்பன அவை. இவ்வாசிரியர், இந்நூலில் பாட்டுடைத்தலைவர் செய்தருளிய அற்புதச் செயல்களை ஆங் காங்கு எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் செய்தருளிய அற்புதச் செயல்களுள் இதில் எடுத்தாண்டவை வருமாறு:-

திருமுலைப்பாலுண்டருளியது. சிவனை இவன் எனச் சுட்டிக்காட்டியது. தாளம் பெற்றது. கோல்பிடித்து ஊன் றுவாரின்றி ஓடத்தை வருகென்றது. ஆண்பனை பெண்பனை யாக்கியருளியது. மருகலில் வணிகனுயிர் பெற்றெழப்பதிகம் அருளியது. பூம்பாவை குடத்திலிருந்தெழ மயிலையில் பதி கம் அருளியது. பாண்டியன் உடல்வெப்புங் கூனும் தீர்த்து அவனுக்குச் சைவ வாழ்வருளியது. பவுத்தனைத் தலைவீழப்

பார்த்தருளியது. வைகைப்புனலில் ஏடுஎதிரேறச் செய்தருளியது. கனலிலிட்ட ஏடு வேவா தெடுத்தருளியது. முத்துக்குடை, முத்துச்சிவிகை முதலியன பெற்றது. படிக்காசு, பொற்கிழி முதலியவை பெற்றது. வேதங்களாற் பூட்டப்பெற்ற திருக்கதவம் திறக்கவும் அடைக்கவும் பாடியருளியது முதலியன. திருநீறும் பஞ்சாக்கரமும் நிலைநிறுத்தியதும் கூறப்பட்டது.

வடநூற்பெருமாள், தமிழ்ப்பெருமாள், மறையின் பெருமாள் என விளித்து இவர்கள் வடமொழி, தமிழ்மொழி, வேதம் முதலியவைகளில் வைத்திருக்கும் கௌரவ சித்தத்தை வெளிப்படுத்துகிறார்கள். தென்றற்காற்றுலவுதலைச் சிறப்பிக்கிறார்கள். 'தமிழ் வளர்க்கும் புகலியத்தன்' என வாயார மொழிகின்றார்கள். கண்ணப்பர் காளத்தியப்பருக்குப் பணிசெய்தமையைப் பேசுகின்றார்கள். சிவதலங்கள் பலவற்றைச் சப்பாணிப்பருவத்தில் கூறியிருக்கின்றார்கள். இதில் 'இடவை' என்னும் தலம் குறிப்பிடப்படுகிறது. இத்தலம் திருவாசகத்திலும் வந்துளது. கழனியிற் களமர்கள்பேரொலியினையும் சிறப்பித்திருக்கிறார்கள்.

இனி, அமணரைக் கூறும்பொழுது அமண்மிருகம், வேதத்தைப்பழிக்கும் பொல்லாச்சமயப்பகடு, சமணிருட்டு, சமணப்பரி, சமணிவுளி, சமணப்பசு எனக்குறிப்பிடுகின்றார்கள் இவ்வாசிரியர்.

சில பழையவரலாறுகள் :— இராவணன் கயிலையெடுத்தது. இரணியன் உரங்கிழித்த நரசிங்கத்தைச் சிரம்போழ்ந்தது. மார்க்கண்டேயருக்காகக் காலனைக்காய்ந்தது முதலியன. திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு அமணர் இழைத்த தீங்குகளும் பேசப்பட்டிருப்பது காண்க.

ஸ்ரீ மாசிலாமணிதேசிக மூர்த்திகளால் சைவசமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் விஷயமாகச் செய்யப்பட்டுள்ள இப்பிள்ளைத்தமிழின் நடை அவர்கள் அருளிச்செய்த தேவார நடையை ஒத்தே விளங்குகிறது என்னலாம். சில இடங்களில் பொருள் நிச்சயிக்க முடியாமையால் பிரதியில் உள்ளபடியே பதிக்கப்பட்டுள்ளமை காணலாம். பொருள் விளங்காத இடங்களும் பல.

இனி, வடமொழிப் பிரயோகங்களில் சக்ரவாளம், சித்ரப்பிடி, வச்ரக்கை, இந்த்ராதி, சக்ராயுதன், சந்த்ராதித்தர் என இணைந்தியலும் மெய்களை வழங்கியிருத்தல் காண்க. இவர்கள் வாக்கில் அடைய, உழறி, அடைசு, அழறு, மட்டித்து என்பன பயின்றுவந்துள்ளன. செய்தியைச் சேதி என்றும், தூயையைத் துய்மை என்றும் சொல்லியிருக்கிறார்கள். தாவடி என்ற சொல்லும் வந்துளது.

இனி, புதிய புதிய செயல்களும், பொருள்களும், நூல்களும், பிறவும் நாடோறும் தோன்றித் தோன்றி மக்களைத் தன் வயமாக்கித் திகழும் இக்காலத்தில் வழக்கமற்றுப்போயினவும், பாராட்டப்படாதனவுமான நூல்களையோ உரைகளையோ இவ்வாதீனம் வெளியிடுவதால் யாது பயன் எனச் சிலர் நினைத்தல் இயல்பே. சிலர் வெளிப்படையாகச் சொல்லவுங்கூடும். அதனை நினைத்து இங்கே அவர்கள் பொருட்டுச் சில எண்ணங்களை விநயமாக விண்ணப்பிக்கின்றேன்.

ஒரு தேசத்தின் உயர்வுக்கு அத்தேச மொழியில்உள்ள இலக்கிய இலக்கண நூல்களும், சாந்தத்தை விளைவிக்கும் அநுபவ சாஸ்திரங்களுமே சான்றாய் அமைவன. இத் திருவாவடுதுறை ஆதீனத்தின் உயர்வு இவ்வாதீனம் தோன்றிய

காலந்தொட்டுத்தமிழ் நன்மக்களுக்குத் தந்துள்ள இலக்கிய —இலக்கண நூல்களும், சித்தாந்த சைவசாத்திரங்களும் உரைகளும், பிறவும் தமிழ்மக்களால் பெரிதும் பயிலப்பட்டுப் புலமையும் அநுபவமும் ஒருங்கே பெற்று விளங்குவதே போதிய சான்றாம். தமிழ்மொழிப் பயிற்சிக்கும் சித்தாந்த சைவ சமய உணர்ச்சிக்கும் இன்றியமையாத சிறுகாப்பியங் கள் பெருங்காப்பியங்களைப் படித்தறிதலும் சாத்திரங்களைப் படித்தறிதலும் சிறந்த சாதனமாம். ஒரு பழைய நூலால் அதனை இயற்றிய ஆசிரியரின் பாஷாஞான நிலையும் அநுபவ ஞான நிலையும் அவ்வத்துறையில் வல்ல பேரறிஞர்களால் அறிந்து பாராட்டப்படுவனவாம். ஏனையோர் அந்நிலைகளை யறிந்து பாராட்டுவதற்குரியரல்லர். ஏனெனில், அப் பயிற்சி சிறிதும் அவர்க்கின்மையின் என்க. இதனை உலக நிலையில் வைத்துக்காண்போம். மக்களுக்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் ஒருசேர வாணிகர் தொகுத்துக் கடைகளில் வைத்துள்ளனர். மக்களும் சென்று சென்று ஆராய்ந்து பார்த்துத் தத்தமக்குப் பிடித்த ஒன்றையோ பல வற்றையோ வாங்கிச்செல்கின்றனர். ஒன்றும் வாங்காமல் அவ்வழியே செல்வோரும் பலர் உளர். அவருக்கு அப் பண்டங்கள் வேண்டாமையால் அவ்வாணிகரை வீண்செயல் ஆற்றுகின்றனர் என்று அவர் சொல்லக்காண்கிலம். அது போல, ஒவ்வொரு மொழியிலும் வல்ல அறிஞர்களும் ஒவ் வொரு அநுபவத்திலே கைவந்த பெரியோர்களும் தம் முடைய நாடு, தம்முடைய மொழி முதலியனவற்றிலே தாம்கொண்ட அன்பைப் புலப்படுத்தித் தம்மாலான தொண் டைச் செய்து வளம்பெறச் செய்வது கண்கூடன்றோ? நம் ஆதீனத்திலேயுள்ள சிவஞானச் செல்வர்களாகிய மஹா சந்நிதானங்களும், தம்பிரான்களும், புலவர் பெருமக்களும் ஆதீனத்துக்கெனத் தேடிவைத்துள்ள கருவூலங்களே கருவி

நூல்களும் சாத்திர நூல்களுமாம் அக்கருவூலங்களிலுள்ள நூல்களாகிய நன்மணிகளையெல்லாம் தமிழகநன்மக்கள் பொருட்டு ஆயிரம் ஆயிரமாக மாயிரு ஞாலம் அறிந்து போற்றும் வகையில் வாரிவாரி வழங்குவது நமது பெறற்கரும்புண்ணியமேயாம். இன்று இவ்வாதீனத்திலிருந்து வெளிவரும் நூல்களின் மதிப்பையும், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் கல்விவளம் பெருக மக்களுக்கு அருள் செய்யும் திறத்தையும் பாராட்டாதவர் இல்லை என்னலாம். புதிய புதிய வழிதுறைகளில் எல்லாம் சென்று சென்று தடுமாறும் மக்கட் கூட்டங்கள் நாளாவட்டத்திலே பழைய நெறியை நாடித் தேடி இன்று ஓடிவரக் காண்கின்றோம். அவ்வாறு ஓடிவரும் மக்கள் பொருட்டாகவேனும் முன்னோர் தேடிவைத்த நூல்களைப் பயன்பெறத் தரவேண்டுமன்றோ? இது கிடக்க.

இனி, 'கமுக முகில் தட்டிவரு கோட்டாறு சூழ்' எனச் சப்பாணிப்பருவம் எட்டாம் பாடலில் அருளியிருக்கின்றார்கள். 'கோட்டாறு' என்பது இன்னதென விளங்கவில்லை. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம் திருக்கொச்சைவயம் திருப்பதிகத்தில் 'வயல்புகு நீடு கோட்டாறுசூழ்', 'கோட்டாறொலியா வயல்புகும்', 'வந்தேறு கோட்டாறுசூழ', 'குதிகொள் கோட்டாறுசூழ் கொச்சை', (1, 2, 3, 4) என அருளிச்செய்தமை ஒப்பு நோக்கத்தக்கது. இவைகளால் கோட்டாறு என்பது ஒரு நதியின் பெயர் போலும் எனக் கொள்ளவேண்டியிருக்கிறது. இடவை என்னும் தலம் இடைமருதா? அல்லது இடைச்சுரமா? அல்லது வேறுதலமா? என நிச்சயிக்கக் கூடவில்லை. இவை ஆராய்தற்குரியன.

இனி, விநாயகர் காப்புச் செய்யுளில் மலை வளைத்தாரது மைந்தராகிய எழுகோபுரத்தார் எனக்கூட்டிப் பொருள்

கொள்க. "கல்லால் நிழல்மலை வில்லார் அருளிய பொல்லார்" என்பதை நினைப்பிக்கின்றது இது. இத் தொடருக்கு மலை வளைத்தாரது மைந்தர் ஆகிய அழகிய விநாயகக்கடவுளும், துணைவந்த விநாயகக்கடவுளும் எனப் பொருள் கொள்ளினும் அமையும் இப் பொருளில் கோபுரத்தார் என்பது வாளாநிற்கும். இவ்விரு விநாயகமூர்த்திகளில் துணைவந்த விநாயகர் கிழக்கோபுர வாயிலின் தென்புறத்தில் கோமுத்தி தீர்த்தக் கரையில் கோயில்கொண்டுள்ளார். அழகிய விநாயகர் திருவாவடுதுறைக்கோயிலினுள் தட்சிணாமூர்த்தியின் பக்கத்தில் எழுந்தருளியுள்ளார் என்க. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை நோக்க அவர்கள் அவதரித்த தலத்து விநாயகரைக் கூறின் ஆபத்துக்காத்த பிள்ளையார் அவராவர். நூலாசிரியர் துறைசையிலிருந்து நூலைச் செய்கின்றார்களாகலின் அம்மையாருக்குத் துணைவந்தவிநாயகர் அவர்தம் தம்பியின் துணையாகக் கொள்ளப்படும் ஞானசம்பந்தர் விஷயமாகப்பாடப்படும் இப்பிள்ளைத்தமிழிற்கும் பெரிதுந் துணையாவார் எனக் குறிப்பித்தபடி. காழிப்பிள்ளையார் நூலுக்குக் காழிப்பிள்ளையாரே காப்பாதல் மரபாம். அன்றியும், துறைசையிற் கோபுரத்தாராகிய துணைவந்தார் இந்நூலுக்குத் துணையாதலும் மிகப்பொருத்தமாம். பொருந்துவன கொள்க.

யான் இவ்வாதீன கைங்கரியத்தை மேற்கொண்டு ஆதீனக் கல்விக்களஞ்சியமாகிய சரஸ்வதி மஹால்புத்தகசாலையில் உள்ள ஏட்டுச்சுவடிகளையெல்லாம் பரிசோதித்தகாலத்தில் இப்பிள்ளைத்தமிழ் மூலம் மட்டும் உள்ள சுவடிகள் இரண்டு கிடைத்தன. அதனைக் காகிதப்பிரதி பண்ணிக்கொண்டு என் தந்தையார் எழுதிவைத்திருந்த அப்பிள்ளைத்தமிழ்ப் பிரதி யொன்றுடன் ஒப்பு நோக்கித் திருத்தம் செய்து கொண்டேன். பின்பு ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசந்நிதானம் அவர்கள்

உத்தரவு பெற்றுக்கொண்டு தஞ்சை ஆரண்மனைப் புத்தக சாலையிற் சென்று அங்குள்ள ஷை ஏட்டுச்சுவடிகள் மூன்று பிரதிகளையும் வைத்துச் சில அன்பர்களுடனிருந்து ஒப்பு நோக்கிப் பிரதிபண்ணிக் கொண்டுவந்து ஆதீனப்பிரதியுடன் ஒப்புநோக்க, வேண்டிய திருத்தங்கள் பல கிடைத்தன. அவ்வளவில் இப்பிள்ளைத்தமிழ் இவ்வுருவத்தைப்பெற்றது. பின்னும் ஏடுகள் தேடினேன். செந்தமிழ்த் தொகுதி-16ல் இலக்கணவிளக்கபரம்பரை - ஸ்ரீ சோமசுந்தரதேசிகர் 'திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பிள்ளைத்தமிழில் கிடைத்த சில பாடல்களை ஏட்டுச்சுவடியில் உள்ளபடியே வெளியிட்டிருந்தனர். அதுவும் இதனுடன் ஒப்புநோக்கிக் கொள்ளப்பட்டது. சீகாழி—வித்துவசிகாமணி, ஸ்ரீ முத்துத்தாண்டவராயபிள்ளையவர்களால் பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்ற ஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்ப் புத்தகம் ஒன்றும், தருமை —வித்துவான்—திரு. ஆறுமுகதேசிகர் அவர்கள் என்பாலன்பால்தந்த தம் கைக்காகிதப்பிரதி யொன்றும் வைத்து ஒப்பு நோக்கினேனாக. புத்தகம் மூலபாடம் மட்டும் அச்சிட்டுப் பூர்த்தியான பின் மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமையாசிரியரும், செந்தமிழ்ப் பத்திராதிபரும் ஆகிய வித்துவான் —உ-ஹ-வே. கி. இராமாநுச ஐயங்கார் சுவாமிகள் சில பல திருத்தங்கள் தந்து உதவிசெய்தார்கள். அவைகளும் குறிப்புரையிற் காட்டப்பட்டுள்ளன. எல்லாவாற்றானும் இப்புத்தகவுருவிலே வெளிவரச்செய்த திருவருளையும் குருவருளையும் அனவரதமும் சிந்தித்திருத்தலன்றிக் கடைப்பட்ட நாயினேன் செய்யக்கடவ தொன்றின்றன்றே!

இனி, 'இந்தப்பிள்ளைத்தமிழை ஆராய்ந்து அச்சிடுக' என அருளிய இருபதாவது குருமஹாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாணதேசிக மூர்த்திகள் காலத்திலேயே மூலபாடம்

அச்சிட்டு (விக்ருதி—ஆவணி) 29-வது வெளியீடாக வரச் சித்தம் செய்தும் மற்றும் சில ஏட்டுப்பிரதிகளையும் பார்த்துப் பூர்த்திபண்ணலாம் எனத் தாமதிக்கவே அப்போது வெளி வராமல், அதன்பின் ஏறக்குறைய முப்பத்தாறு நூல்கள் வெளிவந்தபின் இன்று அக்குருமஹாசந்நிதானத்தின் இரண் டாவது குருபூஜை வெளியீடாகக் குறிப்புரை முதலியவற்று டன் இது வெளிவருவது குறிப்பிடத் தக்கதாம் என்க.

இனி, இப்பொழுது இவ்வாதீனத்திலே இருபத்தொன் றுவது குருமஹாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து முன்னை யினும் பன் மடங்கு உலகம் உவப்ப சிவ க்ஷேத்திர—குரு க்ஷேத்திர பரிபாலனங்களும், செந்தமிழ்ப் பரிபாலனம்—சித்தாந்தசைவ சமயபரிபாலனங்களும் செய்தருளிச் சீர்த்தி மிகப்படைத்துச் சிவஞானச் செங்கோல் செலுத்தும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் கட்டளையிட்டரு ளியபடி தமிழுலகத்துக்கு விருந்தாக ஞானபோனகராகிய திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழமுதம் யாவரும் நுகர்ந்து தேக்கிட வழங்கப்படுகிறது.

இதன்கணுள்ள குற்றங்களைப் பொறுத்தருளப் பன் முறை வேண்டுகின்றேன்.

இச்சிறந்தபிள்ளைத்தமிழ் வெளிவருவதற்குப் பல் லாற்றானும் துணைசெய்த அன்பர்கட்கு 'ஸ்ரீபஞ்சாக்கர பரமாசாரிய சுவாமிகள் கருணை முன்னின்று காக்க' எனப் பிரார்த்திக்கின்றேன்.

திருவாவடுதுறை
19—3—53

இங்ஙனம்,
சித்தாந்த சைவமணி—
த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,
ஆதீனவித்துவான்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் வரலாறு.

---

திருஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழை அருளிச் செய்தவர்களாகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிக மூர்த்திகள் திருக்கயிலாய பரம்பரைத் திருநந்திமரபு, ஸ்ரீ மெய் கண்ட சந்தானத்துத் திருவாவடுதுறை யாதீனத்துப் பிரதம பரமாசாரியராகிய ஸ்ரீ நமச்சிவாய தேசிக மூர்த்திகள் பிற்றோன்றலாய் எட்டாவது பட்டத்துக் குருமகா சந்நிதானமாக எழுந்தருளி யிருந்தவர்கள்.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் சோழவள நாட்டிலே திருவெண்காடு என்னும் சிவ தலத்திலே பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே அபிஷிக்தர் மரபிலே அவதரித்தவர்கள். இவருடைய தாய் தந்தையர் இருவரும் சிவநெறி தவறு தொழுகிய சீலர்கள். தாயார் பிறந்தகம் சமய குரவருள் முதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருவவதாரம் செய்தருளிய சீகாழிப் பதி என்பர். தந்தையார் திருவெண்காட்டிலே தம் இல்வாழ்க்கையை நடத்தினர். ஆயினும், திருவாவடுதுறையிலே கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ ஒப்பிலா முலையம்மை பங்கராகிய ஸ்ரீ மாசிலாமணியீசரிடத்து ஈடுபாடுடையராக இருந்தார். திருவெண்காட்டிலே முக்குள நீராடி முறைப்படி சுவேதவனேசுரரை வழிபாடாற்றி நல்ல புத்திரப் பேற்றை வேண்டினர். அடிக்கடி திருவாவடுதுறைக்குத் தம் மனைவி

**பிறப்பும் வளர்ப்பும்**

யாருடன் வந்து கோமுத்தி தீர்த்தத்திலே விதிப்படி முழுகிப் பொன்னித் துறையிலும் ஆடி முசுகுந்தச் சக்கரவர்த்திக்குப் புத்திரப் பேறருளிய ஸ்ரீ தியாகராசப் பெருமானையும், ஸ்ரீ ஒப்பிலா முலையம்மையாரையும், ஸ்ரீ மாசிலாமணி யீசரையும் வழிபாடாற்றி வந்தனர். திருமூலதேவரையும், திருமாளிகைத் தேவரையும், ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியரையும் தரிசித்து வணங்கிக் குறையிரந்து வருபவராயினர். சீகாழிப் பதிக்குஞ் சென்று பிரம தீர்த்தத்திலே நீராடி அம்மையப்பரைத் தரிசித்து வழிபாடாற்றி ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையாரை யொப்ப மகப் பேறொன்றுண்டாக வரங்கிடந்தனர். முன்னைத் தவப்பேற்றால் இம்மையிலே சிவபத்திச்செல்வம் நிறையப் பெற்ற அத் தாய் தந்தையரிடத்து நல்ல நாளுங் கோளும் சிறந்த நல்லோரையிலே இந்நூலாசிரியர் திருவருளுங் குருவருளும் வாய்ப்ப அவதரித்தனர். நன்மகவைப் பெற்ற அப்பெற்றோர் மாசிலாமணியீசர் திருவருளால் கிடைத்ததெனக் மனங்கொண்டு அக்குழவிக்கு மாசிலாமணி எனப் பிள்ளைத் திருநாம மிட்டழைத்தனர்.

ஐந்தாம் வயதிலே பள்ளியில் வைத்து நல்லாசிரியரைக் கொண்டு கல்வி கற்பித்தனர். "விளையும் பயிர் முளையிலே" என்ற பழமொழிக் கிணங்க விரைந்து கல்வி கற்பாராயினர். மாசிலாமணியாரின் தமிழ் இலக்கண இலக்கிய நூற் பயிற்சியும், வடமொழிப் பயிற்சியும் வர வர மிக்கது. சமய நூற் பயிற்சியிலும் மனம் வலியுற்றது. தேவார திருவாசக முதலிய அருட்பாக்களில் உள்ளம் அழுந்தியது. கவி செய்யும் ஆற்றலும் மிகுதியாயது. ஞானசம்பந்தப் பிள்ளையாருடைய திருப்பாட்டுக்களில் ஈடுபாடுடையராயினர். நம்பியாண்டார்நம்பிக ளருளிச் செய்த ஆளுடைய பிள்ளையார் பிரபந்தங்களிலும்

கல்வி கற்றமை

ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் அருளிய பெரிய புராணத்திலும் கருத்தூற்ற மிக்கது. பன்னிரு திருமுறைகளிலும் நெஞ்சு பதிந்தது. இத்தகைய மாசிலாமணிப் பிள்ளையைத் தந்தையார் திருவாவடுதுறைக்கு அழைத்து வந்து அம்மையப்பரைத் தரிசித்து அப்பொழுது இவ்வாதீனத்திலே குருமகா சந்நிதானமாக எழுந்தருளியுள்ள ஞான தேசிகரிடத்து அடைக்கலமாக ஒப்புவித்தார். சின்னப்பட்டத்திலே அமர்ந்தருளியவர்கள் ஸ்ரீ முத்தம்பலவாண தேசிகர் ஆவார். ஸ்ரீ மாசிலாமணியார் தமிழ் மொழியில் வல்லுநராயிருந்ததுடன் வடமொழியிலும் சிவாகமங்களிலும் நல்ல பயிற்சியுடையவராகச் சிறந்து விளங்கினர்.

துறவு

ஞான தேசிகர் மாசிலாமணியாருடைய கல்விப் பெருமையையும், வயதின் சிறுமையையும், துறவிலே இருக்கும் மீதூர்ந்த ஆசையையும் நன்கு நோக்கி இம் மாசிலாமணி இவ்வாதீனத்திலே தெய்வ வொளி வீசும் எனத் திருவுளங் கொண்டு இருவகைத் தீட்சையும் முறையே செய்து கல்லாடையுமருளி மாசிலாமணி என்னும் அப்பெயரையே தீக்ஷா நாமமாகச் சூட்டியருளினர். மாசிலாமணியாரும் ஆசாரியருடைய அணுக்கத்தொண்டராய்த் தொண்டாற்றி வழிபட்டு வர உலக நிலையிலே அவர் மனம் உலவாது ஒடுங்குவதாயிற்று. நெடுநேரம் அசைவற நிட்டை கூடியிருப்பர்.

பிள்ளைத் தமிழ் அருளியது

“ தவமும் தவமுடையார்க்கே ஆம் ” அன்றே! ஆளுடைய பிள்ளையாரின் அடிமலர்களில் அனவரதமும் அவர் சிந்தையிருந்து வந்தமையின் அப்பிள்ளையாருக்குரியதாக ஒரு பிரபந்தம் செய்ய எண்ணினர். “ இளம் பருவ விளையாட்டை நோக்குழித் திருவுருவிடத்து ஆசை மிகுதி யுண்டாம் ” என்றபடி மூன்றாம் பிராயத்திலே அம்மையாரருளிய சிவஞானங் குழைத்த பாலமுதை

யுண்டு தேக்கிச் சிவஞானத் தமிழ் மணம் வீசும் பாலரு வாயர் விஷயமாகவுள்ள இப்பிள்ளைத் தமிழைப் பெரு மகிழ்வுடன் எம்மனோருக் கருளினர். சின்னப்பட்டத்தி லெழுந்தருளியுள்ள காலத்திலே இந்நூலை இவர்கள் அருளிச் செய்திருக்கலாமென்று தோற்றுகிறது.

இனி, சின்னப் பட்டத்தி லெழுந்தருளி யுள்ள முத்தம்பலவாண தேசிகருடன் மற்றைத் தம்பிரான் சுவாமிகளும், அடியார் கூட்டங்களும் பின்வர ஞான தேசிகராகிய பிற் குமாரசாமி தேசிகர் சிவதல தரிசனம் செய்து கொண்டு பாண்டி நாட்டைச் சேர்ந்து திருக் குற்றாலத்திலேயுள்ள தமது திருமடத்தி லெழுந்தருளி யிருந்தனர். அப்பொழுது சின்னப் பட்டத்திலுள்ள முத்தம்பல வாண தேசிகர் ஒரு மாசி மாதத்துச் சித்திரை நாளிலே சிவபரிபூரண முற்றார். பத்து நாட் குருபூசையும் முடிந்த பின்பு ஞானதேசிகர் அங்கிருந்து யாவரும் புடைசூழ்ந்து வர, சுசீந்திரத்துக்கு எழுந்தருளி யிருந்தனர். அக்காலத்திலே ஒரு நன்னாளிலே நமது மாசிலாமணியாருக்கு ஆசாரியாபிடேகஞ் செய்து சின்னப் பட்டத்திலமர்த்திச் சுசீந்திரத்திலேயே அவரை இருந்து வரப் பணித்துத் தாம் திருவாவடுதுறைக்கு எழுந் தருளினர் ஞான தேசிக சுவாமிகள்.

சின்னப்பட்டம் பெற்றமை

இஃதிவ்வாறாக, சின்னப் பட்டத்திலெழுந்தருளி யிருந்த ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் சுசீந்திரத்திலிருந்து தம்மையடுத்த பக்குவர்கட்கு அனுக்கிரகம் செய்து கொண்டும், சிவஞான நூல்களை உபதேசித்துக்கொண்டும் சிவானந்த நிட்டையில் இடையறாது இருந்து வந்தார். ஒருநாள் சாமிநாதர் என்னும் பெயருடைய இளம்பிராயப் பக்குவ முதியார் ஒருவர் நமது தேசிகரிடத்து வந்து தரிசித்து நின்றார். அவர் திருநெல்வேலிப் பதியினர்.

**சாமிநாதர் அடுத்நமை**

பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தினர். அவருடைய பத்தி வைராக்கியம் முதலிய வற்றைக் கண்ட தேசிகர் அவருக்கு இரு வகைத் தீட்சையுஞ் செய்து சைவ சந்நியாச மும் தந்தருளினர். ஞான நூல்களையும் உபதேசித்து வந்தார். தேசிகர்பால் ஞான நூல்களை ஐயந்திரிபற உணர்ந்த சாமிநாதர் தவத்தூயராயினார்; தவவொளி வீசத் தொடங்கியது. சாமிநாதருக்குத் தீட்சா குரு ஸ்ரீ மாசிலாமணி தேசிகரே.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகருக்கு அருட் பணிவிடை செய்துகொண்டு சாமிநாதர் அணுக்கத் தொண்டராய்ச் சுசீந்திரத்திலேயே இருந்து வந்தார். அக்காலத்திலே திருநெல்வேலியிலே மயிலேறும் பெருமாள் பிள்ளை என் பவர் ஒருவர் இருந்தார். அவர் பரம்பரைச் சைவ

**மயிலேறும் பெருமாள் பிள்ளை**

வேளாளர். ஆதீனத்துச் சீடருள் சிறந்த வர். தாண்டவமூர்த்திப் பிள்ளையின் தவப் புதல்வர். கல்வி அறிவு ஒழுக்க முதலிய வற்றால் விழுப்ப மிக்கவர். செல்வம், அதி காரம் முதலிய எல்லாவற்றானும் மேம்பட்ட வர். குருலிங்க சங்கம பத்தியில் நிகரற்றவர். ஆதீன காரியங்களில் மிகக் கருத்தூன்றி வேலி போல விருந்து பாதுகாப்பவர். அடிக்கடி சுசீந்திரத்துக்கு வந்து நமது ஆசிரியரை வழிபாடு செய்து அளவளாவி யிருந்து செல் பவர். கல்லாட நூலுக்கு உரையிட்டவர்.

நல்லிலக்கண மெல்லாம் ஒருங்கே சிறந்தமைந்து குருபணிவிடையில் கண்ணுங் கருத்துமாயிருந்து வரும் சாமிநாதத் தம்பிரானுடைய இளம்பிராயத்தையும் முதறிவையுங் கண்டு மயிலேறும் பெருமாள் பிள்ளை பெரிதும் வியந்தார். இவருக்கன்றோ 'நாம் கற்ற கல்வி முழுவதையும் உளங்கொளக்கற்பிக்க வேண்டும்' என்னும்

உறுதி கொண்டார். ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடத்து விடை பெற்றுச் சாமிநாதரையும் உடனழைத்துக் கொண்டு நெல்லையம்பதிக்குச் சென்றார். தொல்காப்பியங்களையும் தொல்காப்பியத்தையும் நன்கு கற்பித்தார். தமிழ்மொழியறிவுடன் வடமொழியறிவும் மேம்பட்டு விளங்க எண்ணினார். திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள செப்பறையிலே கனக சபாபதி சிவாசாரியார் என்பவர் அக்காலத்து மிகப் பிரசித்தரான வடமொழி வல்லுநராய் இருத்தலை யறிந்து அவரைக் கொண்டு வடமொழி வியாகரண முதலிய நூல்களைக் கற்பிப்பித்தார்.

**சாமிநாதர் புலமை**

பன்னிரண்டாண்டுகள் சாமிநாதர் மயிலேறும் பெருமாள் பிள்ளையாகிய தமது இயற்றமிழாசிரியரை விட்டு நீங்காது உடனுறைந்து கற்று, உளங் கொளப் பயின்றனர். பின்பு தாம் சாமிநாதரை அழைத்துக்கொண்டு ஞானதேசிகரிடத்துச் சென்று தரிசித்து இவர் கல்வித் திறமையைப் பரீக்ஷை செய்து காட்டி மகிழ்வித்தார். இத்தகைய மகானை ஞானாசாரியராக எழுந்தருளியிருக்கக் கண்டு தரிசிக்க வேண்டும் என்ற வேணவாவையும் விண்ணப்பித்தனர். ஞானாசாரியரும் "அவ்வாறே செய்வோம்" எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

பின்பு கல்விப் பெருஞ் செல்வராகவுள்ள சாமிநாதத் தம்பிரானுக்கு நிர்வாண தீக்ஷை செய்து சிவஞான போத முதலிய சித்தாந்த நூல்களை யுபதேசித்தருளினர். அவற்றைச் சிந்தித்துத் தெளிந்து அதன் பயனாகவுள்ள

**ஞானநூற் பயிற்சியும் இலக்கணக் கொத்து இயற்றலும்**

ஞானாசாரியருடைய அருட்பணி விடையில் அகலாது அணுக்கத் தொண்டராயமர்ந்தார். தாம் கற்ற இலக்கண இலக்கிய நூல்களிலே இலைமறை காய் போல்

மறைந்து கிடந்த இலக்கண விதிகளை யெல்லாம் திரட்டி "இலக்கணக் கொத்து" எனப் பெயரிட்டு உரையும் வகுத்தனர். பின்பு, ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் சாமிநாதத் தம்பிரானுடன் திருவாவடுதுறையை யடைந்து தமது ஞானாசாரியராகிய ஸ்ரீ பிற் குமாரசாமி தேசிகரைத் தரிசித்து அங்கிருந்தார்.

ஸ்ரீ ஞான குரவராகிய பிற் குமாரசாமி தேசிகர் சிவக்ஷேத்திர யாத்திரை செய்யத் திருவுளங் கொண்டார்.

**எட்டாம் பட்டத்தில் எழுந்தருளல்**

சோழநாட்டுத் தலங்களைத் தரிசனம் செய்து பாண்டிய நாட்டை யடைந்து பல தலங்களையுந் தரிசித்துச் சுசீந்திரத்தை யடைந்து தமது திருமடத்திலெழுந்தருளி அங்கே வசித்துவந்தார். அக்காலத்திலே ஓர் ஆவணி மாதத்து உத்தராட்டாதி நாளிலே ஞான தேசிகர் சிவ பரிபூரண முற்றனர். பின்பு ஞான தேசிகர் ஆகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் பீடாதிபத்தியம் பெற்றுத் திருவாவடுதுறையி லெழுந்தருளி யிருந்தார்.

ஞான தேசிகராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் தம் அடியவர்களுட்சிறந்த சிவக்கொழுந்து தம்பிரானுக்கு ஆசாரியாபிடேகம் செய்து ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் என்னும் பெயருடன் சின்னப் பட்டத்தி லமர்த்தினர். மயூரகிரிக் கோவை இயற்றிய சாந்துப் புலவரின் மூன்றாம் பாட்டனார் சர்க்கரைப் புலவர் என்பவர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகருடைய மாணவரே.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் திருவாவடுதுறையிலே மாகேசுர பூசையைச் சிறப்புற நடத்தி மடாலயத்தில் எழுந்தருளி யிருந்தார். அக்காலத்திலே ஒருநாள் பேயும் உறங்கும் நள்ளிரவிலே தஞ்சை மன்னர் பஞ்சம வேடம் பூண்டு சென்று, அம்மடாலயத்தின்

புறத்தே தூரத்தே நின்று 'சாமி! அடியேனைப் பசி வருத்துகின்றதே' என்று பேரொலி யிட்டழைத்தார். அப்பொழுது ஒடுக்கத்திலே சிவத் தியான பரராக அறி துயிலமர்ந்திருந்த நமது தேசிகர் ஓலமிட்டழைக்கும் குரலை யுணர்ந்து, மடைப்பள்ளியிற்புகுந்து, ஒரு பாத்திரத்திலே அன்னமுங் கறியும் நிறைய எடுத்து வந்து அன்புடன் கொடுத்துப் 'பசி தீருக' என உபசார மொழி கூறிச் சென்றார்.

**அரசர் சோதனையும் ஆசாரியர் இரக்கமும்**

மறுநாட் காலையில் தவசிப்பிள்ளைகளை அழைத்து 'மடைப் பள்ளி திறந்து கிடந்தமையால் நாய் புகுந்து விட்டது. அதனால், மடைப் பள்ளி முற்றும் சுத்தி செய்து புண்ணி யாக வாசனம் செய்வித்த பின்பு பூசைக்குப் பாகம் பண்ணுக' எனக் கட்டளையிட்டார். பின்பு தஞ்சையரசர் தருமபுர ஆதீன மடாலயத்துக்குச் சென்று அவ்வாறே பசியெனக் கூறி ஓலமிட்டார். அப்போது பண்டாரக் கட்டிலே சிவத்தியானத்துடன் அறிதுயிலமர்ந்திருந்த குரு மூர்த்திகள் ஆசார சிலராய் இருந்தமையால் மடாலயத் திலே "நீசருக்குப் பிச்சை யிடமாட்டார்கள்" என்று அன்புடன் சொல்லிப் போக்கினர். இங்ஙனம் இரவிலே நடந்த செய்திகளை அரசர் தஞ்சையில் அரசிருக்கை மண் டபத்திலே இருந்து அனைவரும் அறியச் செய்தனர் என்ப.

பின்பு ஒரு புண்ணிய காலத்திலே ஸ்ரீ மாசிலா மணி தேசிகர் சிவதல தரிசனம் செய்துகொண்டு காவேரி சங்கம ஸ்நானத்துக்கு எழுந்தருளினார். அப்போது தஞ்சையரசரும் நீராடி வந்து திருவெண்காட்டிலே பரிச னங்களுடன் தங்கியிருந்தார். ஞானதேசிகரும் நீராடித் திருத் தொண்டர்களும், தம்பிரான்களும் உடன் வரச் சென்று தமது திருமடத்திலே எழுந்தருளி யிருந்தார்.

**பிராமணபோசனமும்**

**உவர்நீர்க்கேணியும்**

தஞ்சை அரசர் ஒரு மண்டலம் வரை பிராமண போசனம் மிகச் சிறப்புடன் செய்வித்தனர். பிராமணபோசனத்தின் மகத்துவத்தை வெளிப்படுத்த அரசர் எண்ணி உச்சிட்டத்தை அங்குள்ள ஓர் உவர்நீர்க் கேணியிலே போட்டு வரச் செய்து முடிவிலே தூர்வையெடுக்கச் செய்தார். பின்பும் அக்கேணியில் உவர்நீரும் புழுக்களும் நீங்காமல் இருப்பதையறிந்து பெரிதும் கவன்றிருந்தார்.

**உவர்நீர்க்கேணியும்**

**மகேசுரபூசையும்**

இதனை யுணர்ந்த ஞானதேசிகர் அரசர் முகமாக ஒரு மண்டலம் வரை மாகேசுரபூசை நடத்துவித்தார். அம்மாகேசுரர் உச்சிட்டங்களைத் தமது மடாலயத்திலே யுள்ள உவர் நீர்க் கேணி யொன்றில் போடச் செய்தார். இறுதியிலே அரசரையும், பிராமணோத்தமர்களையும், பொது மக்களையும் உடன் வைத்துக்கொண்டு அவ்வுவர் நீர்க் கேணியைத் தூர்வை யெடுப்பித்தார். அப்போது உவர் நீர் முற்றும் நீங்கிக் கங்கைநீர் போலத் தூயதாய் விளங்கி ஊற்றுப் பெருகியது.

**பரிகலக்கிணறும்**

**முற்றூட்டுநிலமும்**

அரசர் அக்கிணற்றுக்குப் 'பரிகலக்கிணறு' என்னும் பெயர் இன்று முதல் என்றும் வழங்கிவருக எனக்கட்டளையிட்டனர். மாகேசுர பூசைக்கு ஆகும்படி முற்றூட்டு நிலமும் அளித்தனர். அவை இப்போதும் இவ்வாதீனத்துக்குரியனவாக உள்ளன. இக் குருமூர்த்திகள் அடிக்கடி திருவெண்காட்டில் உள்ள தமது திரு மடத்துக்கு எழுந்தருளிச் சிவானந்த நிட்டையிலிருப்பது வழக்கம். ஸ்ரீ மாசிலாமணி தேசிக மூர்த்திகள் தமக்குப் பின்பு ஒன்பதாவது பட்டத்

திலே ஸ்ரீ இராமலிங்க தேசிகரை இருக்கச் செய்து தாம் திருவெண்காட்டிற்குச் சென்று நெடுநாள் அசைவற நிட்டையிலிருக்கும் காலத்து நரிகள் அவர் திருமேனியைக் கடித்தூறு செய்து உண்ணும்போதும் அவர்கள் உணர்ந்திலர். அப்பொழுது அவ்வழியே சென்ற மக்கள் அது தெரிந்து நரிகளை விரட்டி நமது ஆசிரியரை நிட்டை கலைத்து எழுப்பினர் என்ப. அதனால் 'நரிப்பண்டார சந்நிதிகள்' என அவர்களை மக்கள் அழைப்பாராயினர்.

**காலம்** ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் பட்டத்திலெழுந்தருளியுள்ள காலம் கி. பி. 1625—1658 என்ப. அவர்கள் 33 ஆண்டுகள் பீடத்தி லெழுந்தருளியிருந்து ஞானோபதேசம் செய்துவந்தார்கள். பின்பு, ஞானதேசிகர் திருவெண்காட்டிலே சிவசமாதி கூடியிருந்து ஒரு சித்திரை மாதத்து உரோகிணி நாளில் சிவபரிபூரண மெய்தினர்.

---

# ஆதீன வெளியீடுகள்

## ஆதீனவித்வான் த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால் பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டவை.

22. பூப்பிள்ளையட்டவணை முதலியன
23. சதமணிக்கோவை பொழிப்புரை
24. திருவள்ளுவரும் பெரியபுராணமும்
25. சமயம்
26. திருச்சிற்றம்பலதேசிகர் கலம்பகம்
27. அத்துவிதவாக்கியத்தெளிவுரை
28. சிவஞானபோதச்சூத்திரம் உரை
29. திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ்
30. சிவஞானசித்தியார் ஆராய்ச்சி (வேறுபதிப்பு)
31. திருப்பள்ளியெழுச்சி (வேறுபதிப்பு)
32. முத்திபஞ்சாக்கரமாலை முதலியன
33. மாதவச்சிவஞானசுவாமிகள் பிரபந்தங்கள் I
34, 35. துண்டுப்பிரசுரங்கள்
36. திருவாவடுதுறையாதீனவரலாறு
37. பாரததாற்பரியசங்கிரகம்உரையுடன்
38. உலகுடைநாயனார் கழிநெடில்
39. கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி (மாதவ)
40. அம்பலவாணதேசிகர்நினைவுமலர்
41. சந்தானாசாரியபுராணசங்கிரகம்
42. சந்தானகுரவர்நான்மணிமாலை
43. விநாயகரகவல்உரை
44. திருவுந்தியார்உரை (மெய்கண்)
45. திருக்களிற்றுப்படியார்உரை (மெய்கண்ட)
46. கயிலைபாதிகாளத்திபாதியந்தாதியுரை

47. நமச்சிவாயமூர்த்தி ஆற்றுப்படை (வேறுபதிப்பு)
48. சைவப்பேரரசு
49. திருவஞ்சைக்களம்தேவாரம் உரை
50. திருமந்திர சிந்தனை (நவாக்கரி)
51. வடதிருமுல்லைவாயிலந்தாதியுரை (மாதவ)
52. போலிவினாமறுப்பு
53. சோமேசர்முதுமொழிவெண்பா மூலம்
54. சிவஞானபோதம் பழையவுரை (மெய்கண்ட)
55. திருக்கோகரணம் தேவாரம்உரை
56. திருஞானசாகரம்
57. இருபாஇருபது உரை (மெய்கண்ட)
58. துகளறுபோதம் பொழிப்புரை
59. கந்தபுராணதத்துவம்
60. சகலகலாவல்லிமாலை உரை
61. திருவெம்பாவை பதவுரைபொழிப்புரைகள்
62. திருப்பருப்பதம் தேவாரம்உரை
63. திருவெம்பாவைக்கருத்துமுதலியன
64. சிவபூசைத்திரட்டு
65. சிவப்பிரகாசம் உரை (மெய்கண்ட)
66. திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ் ஆராய்ச்சி
67. தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம், ஏகாம்பரநாதருலா முதலியன
68. அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் (மாதவ)

**47 + 21 = 68.**

இப்பிள்ளைத்தமிழ் வேண்டுவோர் தனித்தனி எட்டணாத் தபால் தலைச்சீட்டு **ஆதீன லைபரெரியனுக்கு** அனுப்பிப் பெற்றுக்கொள்க. ஒரு புத்தகத்துக்குமேல் ஒருவர் பெற இயலாது.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்.

---

## விநாயகர் வணக்கம்

### நேரிசை வெண்பா

துறக்கவொண் ணுவைவர் சூழலிற் சூழ்வார்
துறக்கவொண்ணு வீடு துறப்பேன்—மறக்கதிர்வேல்
மாபுரத்தார் வேவ மலைவளைத்தார் மைந்தரெழு
கோபுரத்தார் நூபுரத்தாள் கொண்டு.

*குறிப்புரை :*

மறம்—வீரம். மாபுரத்தார்—பெருமைதங்கிய மும் மதில்களிலிருந்தார், அவர் திரிபுரத்தார். மலை—மேரு மலை. "வளைந்தது வில்லு விளைந்தது பூசல், உளைந்தன முப்புரம் உந்தீபற, ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற" என்பது திருவாசகம். "வல்லசுரர் புரங்கள் மூன்றும் வரைசிலையா வாசுகிமாநாணுக் கோத்துத், துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவளநீறு" திருநாவுக்கரசர்; திருத்தாண்டகம். மலைவளைத்தார் — சிவபெருமான். மைந்தர் — மூத்த பிள்ளையார். இவர் ஆபத்துக் காத்த பிள்ளையார். நூபுரத் தாள் — தண்டையணிந்ததிருவடி. நூபுரம்—சிலம்பு. துறக்க ஒண்ணு ஐவர் — நீக்க முடியாத ஐம் புலன்கள். சூழலில்—சூழ்ச்சியில், சுழலில் எனலுமாம். சூழ்வார்—அகப்பட்டுக்கொள்வார். துறக்க ஒண்ணு வீடு —என்றும் நீக்க முடியாத உடம்பு. ஐம்புலச்சேட்டை தவிர்ந்தார்க்கன்றிப் பிறப் பிறப்புக்கள் நீங்க மாட்டா என்றவாறு.

# நூல்

---

## 1. காப்புப் பருவம்.

### பிரமீசர், திருநிலைநாயகி

1. கார்மேவும் பொழில்சூழுங் கதிர்மாட வீதிக்
கழுமலத்தார் பெருவாழ்வைக் கவுணியனைக் கமலத்
தார்மேவுந் திருப்புயத்துச் சைவசிகா மணியைச்
சம்பந்தப் பெருமானைத் தமிழ்க்களிற்றைப் புரக்க
பார்மேவு மறைவாழத் திருப்பொய்கைக் கரையிற்
பவள்வாய் திறந்தழுத பசுங்குதலை கேட்டுச்
சீர்மேவுந் திருத்தோணி யழகோடு மிருந்தார்
சென்றமழ விடையுடனே நின்றதிரு நிலையே.

[பிரதிபேதம்] பவழவாய். சென்றுமழ விடை.

### திருநீறு

### (வேறு)

2. இரவி துவக்கிவிடு சூரது ரகத்திரளை
மேற்குப் பாய்ச்சு
மிரவின் மடத்திலிடு கனல்வ ழுதிக்கிடவு
மேட்டிற் றீட்டி
யெரியி லிடக்கடவ தெனவ வரிட்டவுரை
தீக்குத் தோற்க
வினிய தமிழ்ப்பனுவல் பனிம லரொத்தெழவும்
நாட்டைச் சூழ்த்த

பரவை புகப்பெருகு நதியி னில்வெற்றுடல
மேற்புற் போர்ப்பார்

பழிமொழி பொய்க்கவெதிர் வழிமொழி மெய்த்
தீர்க்குட் பூத்த [திடவும்

பதும மலர்புதுமை யணைய திருக்குவளை
சாத்திப் போற்றல்

பழகுப வுத்தவொரு சிரமுரு ளத்தொடவும்
நாற்றிக் கேற்க

விரவு புகழ்ப்பழன மயிலையி லச்சமொடு
பூத்துப் பூத்து

விடுமர வெச்சில்பொதி குடம்வ டிவைத்தரவு
மாற்பொற் றேற்ற

வியன்ம துரைக்குளமண் மிருகமடை யப்புகுதும்
வேட்டைக் காட்டை

விரகில் வளைத்துரிய செலவி லழித்திடவு
மேற்றிற் றேற்றும்

அரனை விரற்கமல மலரை யெடுத்தினிது
காட்டிக் காட்டி

யமுத தமிழ்க்குழவி சிறுபிறை நெற்றியினில்
வாய்க்கச் சேர்க்க

வடவி துவக்கிவரு பிறவி தவிர்க்குமென
வேற்றிச் சாற்று

மடியவர் தத்தமடி யமரர் துதிக்கவரு
ணீற்றுக் காப்பே.

காண்மாறியாடிய கடவுள்

(வேறு)

3\. அலையார் புனல்சூழ் கூடலிலன்
றருகத் திரளைக் கழுவேற்றுங்
கலையார் செஞ்சொற் றமிழ்ப்பெருமாள்
காழிப் பெருமாள் தனைக்காக்க
தொலையா நீதித் திருநீற்றுச்
சொக்கப் பெருமாள் நம்பெருமாள்
மலையான் மகளார் தனிப்பெருமாள்
மன்று ளாடும் பெருமானே.

(பி-ம்) தமிழ்ப்பெருமான், காழிப்பெருமான், சொக்கப்பெருமான், நம்பெருமான், மலையான் மகளார் தமிழ்ப்பெருமான், மன்றுளாடும் பெருமானே என்பன.

சிற்சத்தி

(வேறு)

4\. இருளுருவ மானுததி யமுதாக்கி
வான்தேவர்க் கூட்டவும்
எழுதரிய நான்மறைக ளயன்வாக்கி
லாய்ந்தோதிக் காட்டவும்
இரவியெழு பார்பொதியு மிருணீக்கு
வான்றேர்விட் டோட்டவும்
இசைபுனையு மாமுனிவர் தவவாய்ப்பு
நீங்காமற் பார்க்கவும்

மருவுமத யானைபல திசைகாத்தல்
பாங்காகக் காக்கவும்
வடகனக மால்வரையின் முறைகோத்தல்
வான்பாரைப் பார்க்கவும்
மறுகிலிடு வார்களிடு பலியேற்கு
மாண்டாருக் கோட்டினில்
வருநெலிரு நாழிகொடு குடிவாழ்க்கை
வாழ்ந்தானைப் போற்றுதும்

அரியசிவ ராகவனை யொழுகாற்றி
லூர்ந்தோடத் தாற்கரை
யணையவரு மாமணியை முகிலார்த்த
கோன்கூனைப் போக்கிய
வதிமதுர வாசகனை வழிகாக்கு
மாண்டாலத் தாற்பழ
மருள்புரியு மாதவனை யழல்வேட்கை
மூன்றுய்மூட் டாதுதொழில்

கருதுசதுர் வேதியனை யருணீற்றை
யாங்காணக் காட்டிய
கமலகர நாயகனை யலைவாய்க்குள்
வீழ்ந்தோடக் கார்கலி
கடுகியடு சேவகனை வயல்சூழ்ந்த
பூங்காழித் தோற்றிய
கவுணியர் குலாதிபனை யமண்வேட்டை
போந்தானைக் காக்கவே.

## விநாயகக் கடவுள்

(வேறு)

5. இட்டபட ரெரியினவர் முட்டச்சொல் வேவமலே
யெற்றிவரு நதியிவிடு சொத்தைச்சொல் வேலேபுக
வெக்கரிடு தரளம்விளே கொற்கைக் குலாதிபதி
யெய்ப்பவிடு தழல்குளிர முற்பட்ட கூனிமிர

விட்டவிடை யுடனுலவு கட்டப் பதாதியமண்
மிச்சியகை யொழுகுகழு வுச்சிக் கடாவியருள்
மெத்தவர வொலிவளர முத்துற்ற நீழல்வரு
வித்தகன் றிசைதிசையி லத்திக்கு மாறருள்க

வட்டகுல கிரிமறையி னுற்பத்தி யானசெவி
யற்பமிசை யினுமிளக வொப்பித்த வாபரண
மர்க்கர்வெயில் விடுசுடிகை வர்க்கத்த வாய்மிளிர
வக்கடல்க ளடையவொரு கைக்குப் பொருசுவற

முட்டவெளி மறையவதின் மட்டித்த தோள்வளர
மொட்டைபட வமரர்தலே குட்டிக்கொ ளாமுனிவர்
முத்திதரு பெருவயிறு மெத்தப் பராவரிய
முக்கனியு மமுதுசெயு முக்கட்க டாமலேயே.

[பி–ம்] கொற்றக் குலாதிபதி. திசையி லத்திக்கு மாறருள. மறையினுற்பத்தியான. மக்கர் வெயில்விடு.

## முருகக் கடவுள்

(வேறு)

6\. கடலையிரட் டியிரட்டி நாளும்விழி
கடியபுனல் கக்கமுத்தி தேடும்வகை
கருதிமயி ரைப்பறித்து வாய்சகதி
கமழவுண வைப்பெருக்கி மாசுடைய

உடலைவளர் புற்றெருடுத்த பாய்பொதியு
முலவுகழு தைப்புரக்க மாவமண
ரொழுகுகழு விற்பதைக்க வாதுசெயு
முரியதுணை யைப்புரக்க நீடுதிறல்

விடவரவி னுச்சிவைத்த பார்வயிறு
மிகவெரியி லுற்றதிக்கி லானைபல
விடுசெவிடு பட்டலக்க ணுகமலை
மிசையுருவு பெற்றதொத்து நாடரிய

வடவிடுெடு கொக்கரித்த சூரனுட
லூறுகுறையி னைப்புசித்த பேய்கவர
வணிமயிலு கைத்துவெற்றி வேல்கடவி
யமரர்சிறை வெட்டிவிட்ட சேவகனே.

[பி-ம்] பார்ப்பொதியி னுலவு கழுதை. மயிலு
கைத்த. மயிலுகைத்த.

## திருப்பொய்கை

(வேறு)

7\. இழிந்த தேவரை யாமெலாந்
தேவரென் றேத்திய தடுமாற்ற
மழிந்து போம்வகை யையனைக்
காட்டிநின் றழுதவன் றனைக்காக்க

மொழிந்த நாண்மலர்ச் சிறடிப்
பேதையார் முகிண்முலைத் திருஞானம்
பொழிந்த பான்மணந் தன்மண
மாக்கிய பொய்கையங் கரைதானே.

[பி–ம்] தடுமாற்ற மழிந்து போம்படி.

பன்னிரு திருப்பெயர்ப் பழம்பதி

(வேறு)

8. வருமமலை யழித்தானைக் கூனையொழித் தானை
வலியவிடந் தீர்த்தானைத் தலைவிழப்பார்த் தானை
மதுரையினில் வென்றானை யழகுறவின் றானை
மறைவிளங்க வந்தானைத் திருநெறிதந் தானைத்

திருமுலையுண் டழுதானைக் கண்டுதொழு தானைத்
திருநீறு புனைந்தானைக் கலியைநலிந் தானைத்
தேவர்தொழற் கரியானைப் பரவவுரி யானைத்
திருஞான சம்பந்தப் பெருமானைப் புரக்க

பிரமபுரம் வேணுபுரம் பெரும்புகலி சுரும்பார்
பிரசமலர்ப் பொழில்புடைசூழ் வெங்குருமெய்த்
[தோணி
பிறங்குபுனற் பூந்தராய் நிறங்கொள்சிர புரஞ்சீர்
பேசரிய புகழ்புறவஞ் தேசுயர்தென் சண்பை

பரமகதி தருங்காழி கொச்சைகழு மலமாம்
பலவமரர் நிலைகுலையப் பிரளயங்கோத் தெடுத்த
பரவையினி லுலகழுந்த வழுந்தாது மிதந்த
பன்னிரண்டு திருப்பெயரும் படைத்தபழம்பதியே.

## திருப்பதிகம்

(வேறு)

9. செய்யமலர்த் திசைமுகனுந் திகிரிதரித் தோனுந்
தேடரிய திருவுருவைத் திருவிரல்முன் னிறுத்தி
யையனிவ னெனக்காட்டி யமுதமுத முண்டா
ஞானமதென்றபெரு மானையினி தளிக்க
வையைநதிக் கெதிர்நடப்பக் கனல்குளிரக் கிடப்ப
மாமுனிவர்தொழுதரற்றநான்மறையின்சிரத்தைப்
பையரவின் விடந்தீர்ப்பப் பனைபழுப்பப் பார்ப்ப
பானுறுந் திருப்பதிகம் பதினாறா யிரமே.

## சட்டைநாதர்

(வேறு)

10. முலையானவை யானைகண் முகமானவை தாமரை
மொழியானவை தேனிகல் விழியானவை வேலவை
விலையாள்வன காமனை யெனமாத ருலாவரு
மிகுகாழியுண் ஞானனை யருள்கூர்தரு மேல்வரு
மலையான்மக ளாலய மகல்வான்முக டேறிட
வசையாதொரு தோணியி லடையாரெயில் காதிய
சிலையான்மலை யான்மக ளுடனேயழ கோடமர்
திருவாரொளி நீடிய திருஞாயிறு காணியே.

மற்றைத் தெய்வங்கள்

(வேறு)

11. தருமத்தின் வழிபிழைத்தார் புரமெரித்துச்சிலர்க்குத்
தரத்துறையும் பதங்கொடுத்தோ னரத்துறையி
[னளித்த

திருமுத்தின் சிவிகைமிசை யசையவரு மணியைச்
சேவித்தங் குடன்வருவார் செங்கமலத் தயன்மால்

பருமத்தக் களியானைத் திசையெண்ம ருக்கர்
பன்னிருவ ருருத்திரர்கள் பதிருெருவர் மறைநூற்

கருமத்து மருத்துவராங் கோரிருவ ரெழுவர்
கன்னியர்க ளெனவுரைக்குங் கனகதலா திபரே.

(பி—ம்) தாதுறையும் பதங்கொடுத்தோ.

காப்புப் பருவ முற்றிற்று.

---

## 2. செங்கீரைப் பருவம்.

1. கோலொன்று கொண்டகில வலயம் புரக்கவருங்
கோமாறன் மேவியதமிழ்க்
கூடலிற் சமண்மூகர் திருமடத் திட்டவெரி
கொற்றவற் பற்ற மொழியா

மாலொன்று மங்கையர்க் கரசியார் படுதுயரின்
வலிகண்டு சென்றுதவிரா
வஞ்சப் பெருங்கூனும் வெப்புந் தவிர்த்தருளு
மதுரவா சகமதகுபாய்

காலொன்று மாநதி பரந்துவரு கழனியிற்
களையெனக் குவளைகளைவார்
கண்டுவெரு வித்தங்கள் கைநெரித் தருகுமிடை
கன்னலங் காடுமறையச்

சேலொன்றி விளையாடு சீகாழி நாடாளி
செங்கீரை யாடி யருளே
செழுநான் மறைத்தலைவ திருஞான சம்பந்த
செங்கீரை யாடியருளே.

(பி-ள்) சென்றுதவிர. சேலொன்று. கைநெறித் தருகு.

2. ஒருமலைச் சாபம்வளை யத்திரி புரஞ்செற்ற
வும்பர்நா யகனருளினு
லோரா யிரங்கதிர்க ளுடையகூ ரியரடைய
வுடனிருந் தனையவொளிசூழ்

பருமணிக் காலினொடு பலகோடி வெண்டிங்கள்
பாரித்த தனையதரளப்
பந்தரிற் பட்டிச் சரத்தன்று குலவவரு
பரசமய குலகாலனே

தருமலர்த் தாதுவிரி தாமரைக் காடுமெழு
தாணில முங்குமுதமுந்
தந்தமணை நாறுமுலை தந்தவுமை யாளொடு
தடம்புனற் கரையிலுதவுந்

திருமுலைப் பாறு சீகாழி நாடாளி
செங்கீரை யாடியருளே
செழுநான் மறைத்தலைவ திருஞான சம்பந்த
செங்கீரை யாடியருளே.

(பி—ள்) நாயகரருளினு. பட்டீச்சரத்தின்மிசை.
சூலகாலனீ.

3. கையினு ஞெடொறுங் களமரிது களையெனக்
களையொழு தென்றும்வயலிற்
காலினுல் மடையழறு கருமேதி யினம்வரிற்
கவரொழு தென்றுமனுகா

வெய்யகா னகமனுகி மேயுமா னினம்வந்து
மேயொழு தென்றுமலைவாய்
விளைதினை காக்கும்வகை வெட்டுவார் [படைகொண்டு
வெட்டொழு தென்றும்விரகால்

மையுலா வியவிதழ்க் குவளையுங் குலவுகொடி
வள்ளையுந் தளவுமழகார்
வண்குமிழு மிருளகல மாணிக்க வொளிவீச
மாடமா ளிகைதோறுமோர்

செய்யதர் மரையின்மலர் சீகாழி நாடாளி
செங்கீரை யாடியருளே
செழுநான் மறைத்தலைவ திருஞான சம்பந்த
செங்கீரை யாடியருளே.

(பி—ள்) மாணிக்கவொளிவீசு.

4. அகரவட் டக்கலச முலையரிவை யொருபக்க
மரசாள விட்டுமுடிமே
லம்பரத் திடையுலவு கங்கைப் பெரும்பரப்
பலையெறிய விட்டுமிசையே

பகருமெட் டுத்திசையு முலவுபுர மெரிபடப்
பகழிவிட் டயனுச்சியிற்
பச்சைத் தலைக்குளிடு பிச்சைக்கு நச்சிவரு
பரமரருள் பெறுபுதல்வமா

மகரவட் டப்பரவை யெழுமுகட் டுக்கிழிய
மஞ்சுவிரி யுங்குலைவிடா
வாழைப் பெருங்காடு தாழைப் பெருங்காடு
மண்டிவளர் சக்ரவாளச்

சிகரவட் டத்தைநிழ லிடுபுகலி வருகுருசில்
செங்கீரை யாடியருளே
செழுநான் மறைத்தலைவ திருஞான சம்பந்த
செங்கீரை யாடியருளே.

(பி—ள்) அகருவட்டக்கலச. பரமனருள்பெறு.
வருகுரிசில்.

5. கஞ்சா சனத்தரிவை பிரியாத தாமரைக்
கண்ணனுங் கண்ணனுதரக்
கமலா சனத்தில்வரு திசைமுகக் கடவுளுங்
கர்ணும னின்றுகதறப்

பிஞ்சாய வெண்மதி முடிக்குஞ் சடாடவிப்
பெருமானை யொருமாமலைப்
பேதையொடு கண்டருளி வேதநிலை யிடவுரிய
பிரமபுரி வருபரமபோ

ரஞ்சாத கதிரிரவி யிரதந் துவக்கிவிடு
மாடல்வெம் புரவியிருபா
லசையவிடு வெண்சா மரைப்பெருங் கற்றையுட
னலர்கதிர்க் கற்றையசையச்

செஞ்சாலி யுடுமுகடு தொடுபுகலி வருகுருசில்
செங்கீரை யாடியருளே
செழுநான் மறைத்தலைவ திருஞான சம்பந்த
செங்கீரை யாடியருளே.

(பி—ள்) கஞ்சாதனத்தரிவைபிரியாத. தாமரைக்கண்ணுடைக்கண்ணனுதரக்கமலாசனத்துவரு. சடாடவிப்பெருமானை. பேரஞ்சாதகதிரிரவி. மாடலம்புரவி. கற்றையுடனலைகதிர்க்கற்றை. செஞ்சாலியொடுமுகடு.

6. வரைசிலை யாம்படி வளையவு கந்தா
ஞார்ந்தா னுஞ்சால
வயிறது காந்திய தழல்செல வூன்றிய
மண்டா னுண்டாக

வுரைபல தாங்கிய நிசிசரர் தாங்குடி
யொன்றாய் வந்தேற
வுரிமையர் வேண்டிய கதிபெற வீந்தவன்
மைந்தா வண்டூதும்

விரைகமழ் பூம்பணை யிணையிடு தூண்டில்வெ
ருண்டே செஞ்சேல்கள்
மிசைசெல வாங்கனி விரவிய மாங்கனி
விண்டூ றுஞ்சாறு

திரைபொர வோங்கிய புகலிய ராண்டகை
செங்கோ செங்கீரை
செருவினி லன்றெழு மருகர் குலாந்தக
செங்கோ செங்கீரை.

(பி-ள்) விரைசெயவாங்களிவிரவியமாங்கனி. செரு
வினிலென்றெழுமருகர்.

7. அயலுரை தாங்கிய சிறுவனொ டன்றறை
யுந்தூ ணங்கீறி
யவனுடல் தான்றுடை யதனிடை போழ்ந்தனை
யுங்கோ டுஞ்சாது

வயவலி தான்சொலு மளவினி லாங்கவன்
வெங்கோ பந்தீர
வயிறெறி தோன்றிட விசைகொடு போழ்ந்தவன்
மைந்தா கொண்டாடு

மியலொலி பாண்கிளை யிடையொலி வாங்கிய
வெங்கோ டுங்கோடு
மெழுமொலி தேன்றரு மினவொளி மூன்றழ
லங்கே குன்றாத

செயலொளி யோங்கிய புகலிய ராண்டகை
செங்கோ செங்கீரை
செருவினி லன்றெழு மருகர் குலாந்தக
செங்கோ செங்கீரை.

(பி-ள்) யவனுடன்றூன் றுடையதனிடைபோழ்ந்தனை யுங்கோனஞ்சாது. விசைகொடுபோந்தவன். கொண்டாடுமியலொலிபாண்கிளையெனவொலி. மெழுமொலி தோன்றிடமினவொலிமூன்றழ. செயவொலியோங்கிய.

8\. வசையற வோங்கிய வொருதிரு வோங்கலின்
வந்தே தன்றேளின்
வலிமை யெலாஞ்செய முனிவினில் வீழ்ந்து
நரம்பா லென்பாலும்

இசைபல தோன்றிய குரன்முதல் வாங்கிய
விலங்கே சன்பாட
இனிவரு தீங்கென வெறிபடை யீந்தவன்
மைந்தா மென்காவின்

நகையுடன் மேய்ந்திள வெருமைகள் மாங்கனி
தின்றே றின்றுள
நலனுட னீன்றதன் மகவினை வாம்பெரு
நண்பால் வெண்பால்கள்

திசைகளெ லாஞ்சொரி புகலிய ராண்டகை
செங்கோ செங்கீரை
செருவினி லன்றெழு மருகர் குலாந்தக
செங்கோ செங்கீரை.

(பி-ம்) வாங்கியி லங்கே சன்பாட. மைந்தா வெங் காவின். மேய்ந்தின வெருமைகள். நின்றேற தின்றுள. பெருகன்பால் வெண்பால்கள்.

9\. விரிகதி ரோன்சுழ லிமகிரி யீன்றவள்
வெங்கோ பந்திர
விதிதலை போம்படி முனிதலை வேண்டி
விருந்தாய் வந்தாரும்

வரிவளை யேந்திய மிமையவர் வேந்தனு
நின்றார் கண்டாரும்
மடிபிணை மாம்படி பொருதபி ரான்றிரு
மைந்தா பண்பாடி

அரியினை மூண்டெழு குழலிது காண்பவர்
நெஞ்சோ டுங்கூட
அவிழ்தர வாங்கொரு சிறுகிடை நோம்படி
பந்தோ டன்பாய

தெரிவையர் தாம்பயில் புகலிய ராண்டகை
செங்கோ செங்கீரை
செருவினி லன்றெழு மருகர் குலாந்தக
செங்கோ செங்கீரை.

(பி-ம்) அரியினை மூன்றெழு குழலெதிர் காண்பவர்.

10. வருபகை யேங்கிட வொருபகல் வாங்கிய
சங்கா ளும்பாணி
வடகிரி சூழ்ந்தலை கடைகயி றும்பணி
வன்கா ளங்கால

அருள்புகல் காண்கிலம் வழியடி யோம்பர
மென்றே வந்தார்கள்
அழுதுணை வாங்கெதிர் விடனுகர் வான்றிரு
மைந்தா வண்போதில்

இருசிலை தேங்கம மொருசிலை தாங்கொடு
நின்றார் வென்றேறும்
இருகணை பூங்கணை யிவையிவை வாங்கி
யெதிர்ந்தார் நெஞ்சோடுஞ்

செருமவர் பூண்டெழு புகலிய ராண்டகை
செங்கோ செங்கீரை
செருவினி லன்றெழு மருகர் குலாந்தக
செங்கோ செங்கீரை.

(பி—ம்) மைந்தா பண்போதில்.

---

இரண்டாவது செங்கீரைப் பருவ முற்றிற்று.

---

## 3. தாலப் பருவம்.

---

இனிதாகக் கமலப்பூ மேய்மேதித் திரண்மீ
திளவாளைத் திரள்சீறு வேறுவன் கரைசூழ்
கனிவாழைப் புதல்சாடா வோடாவூர் புகுதுங்
கதிர்மாடம் பயில்காழிக் கதிபாவான் மதிதோய்
பனிவாசப் பொழில்சூழத் திகழ்கூடற் சமணப்
பசுவெண்ணெ யிரம்வந்துட் படுதோழத் திடையே
தனிஞானப் புலியொப்பாய் தாலோதா லேலோ
சம்பந்தப் பெருமானே தாலோதா லேலோ. 1

(பி—ம்) வேறுவண் கரைசூழ்.

விண்டாவத் திவலைத்தெண் டிரைவீசுங் கடல்வாய்
விடுகற்றூண் மிதவைக்கே விடுபுற்பா யுடையார்

திண்டாடக் கரையேறத் தமிழைத்தந் தருளுந்
திருநாவுக் கரையன்றன் சித்தத்தின் துணையே

வண்டானத் தெழுகொல்லிப் பண்பாடிச் சிறைதோய்
மணநாறப் புனலூடே மலரும்புண் டரிகத்

தண்டாமத் திருமார்பா தாலோதா லேலோ
சம்பந்தப் பெருமானே தாலோதா லேலோ. 2

(பி-ம்) கரையேறுந் தமிழை.

உருவைப்புற் படமிட்டுப் பொதியக்கற் றமணை
யுலவக்கற் றுரியிற்புக் குணுமொட்டைச் சமணைக்

கருவைக்கொத் தினைநட்டுத் தலமுட்டப் பயில்பற்
கழுவிற்றைத் தெமையாளுங் காழிக்கற் பகமே

திருவுக்கும் படியொக்கத் திகழ்சித்ரப் பிடியைத்
திசையெட்டும் புகழப்பொற் குடம்விட்டுத் திரியத்

தருவிக்கத் தமிழ்பெற்றாய் தாலோதா லேலோ
சம்பந்தப் பெருமானே தாலோதா லேலோ. 3

(பி-ம்) திருவுக்குப்படியொக்க.

சில பிரதிகளில் 'வாராமே யறிவைப் போகென விட்டு' என்னும் நான்காவது பாடல் மூன்றாவதாகவும், 'உருவைப் புற்படமிட்டு' என்னும் மூன்றாவது பாடல் நான்காவதாகவும் காணப்படுகின்றன.

வாராமே யறிவைப்போ கெனவிட்டுப் புவியோர்
வஞ்சப்புன் சமயத்தே மதிகெட்டுத் திரியப்
பாராமே யதுவன்றித் திகிரிக்கோன் மாயப்
பணிசெய்யப் பழகாமே பழுதாகா மறைநூல்
சோராமே யடிசூடுந் தொண்டர்க்கோர் துயரஞ்
சூழாமே தமிழ்மாறன் றுயர்ப்பட்டுச் சமணைச்
சாராமே முலையுண்டாய் தாலோதா லேலோ
சம்பந்தப் பெருமானே தாலோதா லேலோ. 4

அமிழ்தாரும் படிதேவர்க் கலைநீரைக் கனிடநா
ளரிகாணப் பெருவேகத் தடனுகப் பகுவா
யுமிழ்கோபக் கருகோலத் தாலாலந் தனையன்
றுண்டானைப் பிரியாவாழ் வுடையாள்மா மகனே
குமிழாரங் கரைவாரிக் கொணர்வையைப் புனலிற்
குணபாகத் திடுமேடக் குடபாகத் தெதிரத்
தமிழ்பாடுந் திருவாயா தாலோதா லேலோ
சம்பந்தப் பெருமானே தாலோதா லேலோ. 5

(பி—ம்) வைகைப் புனலிற்.

(வேறு)

சதவிதழ் முகட்டிலெழு சதுமறை தரிப்பதொரு
தலைவனெனு மெய்ப்புனித தாலேலோ
தரையில் பவுத்தரெனு தலைமகி தலத்தினிடை
தகரவிழி வைத்தமுனி தாலேலோ

வதிமதுர முத்தமிழி னடைவுதெரி யத்தெரிய
வமுதமுது நிற்குமிறை தாலேலோ
வடல்படு திசைச்செவியி னமணர்குல சத்துருவென
வரையும்விரு துக்கதிப தாலேலோ

மதகினடி குத்துவன வளைகுலைய மொத்துவன
வழையடவி தத்துவன வாளோடாள்
மறியவெதிர் வெட்டுவன வலைகிழிய முட்டுவன
மலர்நிழலை யொட்டுவன வோரோர்செல்

கதமிருக ளிற்றினின மெனநிறை தடத்துலவு
கழுமல நகர்க்கதிப தாலேலோ
கருதரிய முத்தமிழின் னெறிமுறை வளர்க்கவரு
கவுணியர் குலக்குரிசில் தாலேலோ. 6

(பி—ம்) சதுமறை பரிப்பதொரு. தளர விழி வைத்த முனி. வலைகுலையமொத்துவன.

படைவணிக னச்சிவிடு பணியெயிறு குக்கவிழு
படுகொலையி னைத்தெரிவை பாராமுன்
பதுமவிழி யுக்கபுனல் பரவையி னலைக்கவவள்
படுதுயர்தி ருக்கண்மலர் காணுமல்

விடைபெறவெ டுத்தகொடி மருகலுறை யுத்தமரை
விரகொடு திருப்பதிக நேர்கூறு
விடமதுக டித்தவழி யிழியவரு ளிப்புவியின்
மிகுபுகழ் பரப்புமுனி தாலேலோ

மடைதொறு முகிழ்த்தமதி யெனமணி குவித்தரவின்
வரிவளை யொலிப்பவத னோர்பாலே
வளர்பல வெடுத்தகனி கிழியவதி லுக்கபுனல்
மதகினி லொலிப்பவத னோர்பாலே

கடைசியர் மலர்க்கைவளை கலினென வொலிப்பநிறை
கழுமல நகர்க்கதிப தாலேலோ
கருதரிய முத்தமிழி னெறிமுறை வளர்க்கவரு
கவுணியர் குலக்குரிசில் தாலேலோ. 7

(பி-ம்) மதியெனமணியுகக் கருவின் வரிவளை. யினமணியுகக் கருவின்.

அருகுமுது விட்டவர்க ளடையநுக ரக்கனியை
யடிதொறு நிரப்புவன தேமாவா
னகமிருள மொய்த்தபொழின் மரமதுவை யுய்த்த
யழகினொடு கட்டுவன தேனீமேய் [திசை

குருகுவெரு வக்கமல மடுவினையி னத்துவரு
குலனுட னுழக்குவன நீர்நாவாய்
கொடியவுர கர்க்கரசர் குழீஇவழி புதக்குவன
கொழுவணி கலப்பையத னோர்பாலே

பெருகுவய லிற்புகுது மதகினைய முத்தினிது
பிரியுமணை கட்டுவன சேதாவாழ்
பெருமைதரு நற்பழன மழுகுற வுகந்தகமு
* சூயருமென நிற்பதொரு பேராலே
கருதியநி ரைப்பரவை யுலகினைவ ளர்க்கவரு
கழுமல நகர்க்கதிப தாலேலோ
கருதரிய முத்தமிலி னெறிமுறை வளர்க்கவரு
கவுணியர் குலக்குரிசில் தாலேலோ. 8

(பி-ம்) கொடிவுர கத்தரசர். குழிவழி புதுக்குவன. யுலகினை விளக்கவரு.

மதுரகவி தைக்கடலின் வருபெரும ரக்கலநல்
வழிவிடுவ னப்புடைய மீகாமா
மறிகடல டைத்தவனு மறையவனு மதிப்பரிய
மணியினைம தித்தருள்வி யாபாரா
வதிர்கலி புறச்சமய முதுகளைய றுத்தரிய
வறுசமய வித்துவிளை வேளாளா
வதிமதுர சத்தவலை மதுரையில முக்குடைய
வமண்மிரு கறுத்துவரு கானுளா
முதிரும்வட வைக்கனலின் முறுகுதறு கட்பணியின்
முதுகுகிழி யப்பலவின் வேர்வாய்வீழ்
முதுபழமெ டுத்தவழி யுரகபண பத்திநிரை
முழுமணியெ றித்தவெயில் வாமாலூர்

கதிரவனி லெட்டுமடி யொளிபெருக வெற்றிபுனை
கழுமல நகர்க்கதிப தாலேலோ
கருதரிய முத்தமிழி னெறிமுறை வளர்க்கவரு
கவுணியர் குலக்குரிசில் தாலேலோ. 9

(பி—ம்) வருபொருண் மரக்கல நல். மதுரையி லொழுக்குமிடை. மதுரையி லழுக்குமிடை.

இனமொடுப றித்ததலை யருகரிக முத்திகழு
மெரியினிடை யிட்டவுரை தோலாமே
யிருகரை யொதுக்கியொரு குலகிரிய டுக்குநதி
யிடையிடு தமிழ்ப்பனுவல் போகாமே

சினமிக வடர்த்தபடை வழுதியுட லூட்கும்வகை
திரியவிடு வெப்பிலவன் வேவாமே
சிவனிடமி ருக்குமுமை திருமுலைசு ரக்கவளர்
திருவருள் படைத்தமுனி தாலேலோ

முனைமுனை யறுத்துழவ ரிடவிடவெ டுக்குமரி
முறைமுறை குவித்தபல குடார்போர்
முகில்படு முகட்டினிடை முழுகவிர தத்தினுடன்
முதன்மைதரு பச்சைவய மாவாலே

கனகவரை சுற்றிவரு கதிரிரவி யுட்கவளர்
கழுமல நகர்க்கதிப தாலேலோ
கருதரிய முத்தமிழி னெறிமுறை வளர்க்கவரு
கவுணியர் குலக்குரிசில் தாலேலோ. 10

(பி—ம்) நதியிடையிடை தமிழ்ப்பனுவல். முனமுனை யறுத்துழவரிடவிடவெடுக்கும்வரி.

---

மூன்றுவது தாலப் பருவ முற்றிற்று.

---

## 4. சப்பாணிப் பருவம்.

---

பொங்குதே னொழுகவிடு சண்பகா டவிதழுவு
பொய்கைசூழ் புகலிநகரிற்
புனிதவா ணகையுதவு குமுதவா யமுதவிதழ்
பொழியுஞா னத்தமிழினால்

வங்கமார் கடல்பொதியு மெண்டிசா முகசிகர
மந்தமால் வரைதழுவுபூ
மகளைவாழ் வித்துரிய மறையைவாழ் வித்தெனை
வாழ்வித்த மாநாயகன் [யும்

கங்கைநா யகனிமய மங்கைநா யகனிலகு
கயிலைநா யகனடுபடைக்
காளிநா யகன்வலிய கூளிநா யகனிருவர்
கருதுநா யகன்மறுவிலோர்

தங்கணு யகன்மதலை சண்பைநா யகனினிது
சப்பாணி கொட்டியருளே
தலவலய முழுதுமர வொலிவளர வழுதமுனி
சப்பாணி கொட்டியருளே. 1

(பி-ம்) வாழ்வித் தெமையும் வாழ்வித்த நாயகன் மிலைசக். மறைவலோர் தங்கணுயகன்.

துங்கமத இற்களமர் துன்றுகுடி லிற்புரிசை
சூழுமக ழிற்படுகையிற்
சுழிதரு குரம்பின்மலர் பொழிதரு வரம்பிலனி
சூழ்தரு கரும்பின்முதலைப்

பொங்குமுறை யிற்புதிய ஞெண்டினளை யிற்குவளை
புல்லுமல ரோடையினறும்
பூகக் கிடங்கிலரி தாளிற் பரம்பிலிடு
போரிற் களங்களில்விடா

மங்கல மலர்ப்பணையில் வண்டெழு குளக்கரையின்
மஞ்சளிடு பத்திகளினீள்
வாழையட ரிற்பெரிய தாழையடி யிற்கனிகொள்
மாவினிழ லிற்பொருகடற்

சங்குசொரி முத்திலகு சண்பைநக ருக்கதிப
சப்பாணி கொட்டியருளே
தலவலய முழுதுமர வொலிவளர வழுதமுனி
சப்பாணி கொட்டியருளே. 2

(பி-ம்) ஞெண்டின்வளையிற்குவளை. மதகிற்கிளைஞர்.

அருவிமுக் கடமுடைய தலைகைசுற் றியபடைய
தறுபதத் திருவுடையதோர்
அரவிடர்ப் படவருவ தடர்பொருப் பொடுபொருவ
தறவிருட் டியவுருவதாம்

ஒருகரக் கொலைகடிய துலகடுக் கியவடிய
துடுவுழக் கியமுடியதார்
உயிருருக் கியவிரிய துரிசெய்தப் பலியுழலு
மொருவர்மெய்ப் புதல்வவொளிரும்

மருமலர்க் கமுகடவி கதலிகைச் செறியடவி
வகுளமொய்த் தடரடவிதேன்
மலிசுளைப் பலவடவி யகருவிட் டெழுமடவி
மதுமலர்க் குரவடவிநீள்

தருநெருக் கியவடவி தழுவுகொச் சையர்தலைவ
சப்பாணி கொட்டியருளே
தலைவலய முழுதுமர வொலிவளர வழுதமுனி
சப்பாணி கொட்டியருளே. 3

(பி-ம்) உரிசெயப் பலியுழலு மொருவர்

கோமதற் குப்பெருக நொந்தார்க ளாயொன்றை
நோவாமை செய்யநினைவார்
நோயுடம் பானபுற் பாயுடன் பாழாக
நுண்மயிர் பறிக்கைதவிரா

மாமறைப் பேயமணர் கழுமேற் கொளப்புத்தன்
வன்சிர முருட்டியருள்சேர்
மன்னுதிரு முத்தணி மணிப்பந்தர் மிசைநின்ற
மறையிளங் களிறுமறைதோய்

காமலர்த் தேனுண்டு மதுகரம் பெடையுடன்
காமரம் பாடவருகே
கலபமயில் நடமாட முருகுகமழ் செந்நெலங்
கவரிபல வீசவன்னந்

தாமரைச் சிங்காத னத்தேறு புகலிமுனி
சப்பாணி கொட்டியருளே
தலவலய முழுதுமர வொலிவளர வழுதமுனி
சப்பாணி கொட்டியருளே. 4

(பி-ம்) பெரிய நெரந்தார்களாய். நோவாமல் செய்ய.

கொலைபயிலும் வச்ரக்கை யிந்த்ராதி தேவர்தந்
தலைமாலை யிட்டுமகரக்
குழைகட லுடுத்தபடி யின்றிவரு பன்றிவெண்
கோடது புனைந்துமுடிமேல்

நிலைமைதரு கங்கா நதிப்பெருந் திரையுட
னெருக்கினை முடித்தழலும்வாய்
நீடிய பணமகுட மாசுணம் விளைத்தொரு
பிறைநா ணணிந்துமதுரக்

கலைமகளு மலர்மகளு மண்மகளு மடிபரவு
கனகமலை யரையன்மகளைக்
கமலமக ளுடன்மால் புகுந்தேவல் பலசெயக்
கைப்பிடித் தருளுமுரிமைத்

தலைமகனை யொருதிருத் தாதையென வுடையமுனி
சப்பாணி கொட்டியருளே
தலவலய முழுதுமர வொலிவளர வழுதமுனி
சப்பாணி கொட்டியருளே. 5

(பி-ம்) வச்சிரத் திந்த்ராதி தேவர். பன்றிவெங் கோடது முடித்துழலும்வாய். கமலமகளுடன்மால் புகுந்தேவல் செய்யவக்.

(வேறு)

உலவுசெஞ் சுடரிரவி ரதம்வலம் புரிகிரியி
லொற்றிய கயற்கோன்விடா
துடல்வளைந் ததுமிமிர வடவிலங் கலினுமுலை
யுற்றெழுது பொற்றோளினன்

இலகுநண் புயர்புதல்வி யுலகின்மங் கையரரசி
யொக்கலையின் மெய்க்கூடல்வாய்
இகலியன் றமண்மூடுகு சகலபண் டிதமிசையை
யெட்டிய நலைப்பூகமா

மலரின்வந் துலவுதரு பிரமன்முன் பரவிவர
விட்டபல நெட்டேணியோ
மலைபிடுங் கியபொழுது சிவன்விசும் புகட்கையய
நட்டவயி ரக்கால்களோ

குலவுமிங் கிவைகளென நிலவுசண் டையர்தலைவ
கொட்டியருள் சப்பாணியே
குறிகெடும் பரசமய விருள்கெடுங் கதிருதய
கொட்டியருள் சப்பாணியே. 6

(பி-ம்) விலங்கலி லுமுழவை. மங்கையரரசி யோர்க் கலையின். மிசையை யெட்டியதலை பருகமால். மலரின் வந்துலவுதரு பிரமன்முன் பரவ வரவிட்ட. சிவன்விசும் புகட்கைய.

கடியவெம் பிறவிதரு கடல்விழுந் தலறுமவர்
பற்றவரு நற்றேணியே
கவியமிழ்ந் திடவிலகு கருணையம் புனலது
பரப்பிய கார்காலமே

அடிபணிந் தெழுமவர்த மிடிகெடும் படியருள
ளப்பதொரு கொட்டாரமே
அறம்விரும் பிமயமயி லரனுடன் படவினிது
பெற்றதொரு கைக்காணியே

நெடியவன் சமணிவுளி நிறைபிணம் படவுமுறி
நிற்பதொரு புத்தானேயே
நிலையுடன் றெரியுமிய லிசையெனும் பயிர்விளைய
வித்துவரு பொற்பூமியே

கொடியகுண் டர்கள்செவிடு படமகிழ்ந் திருகைமலர்
கொட்டியருள் சப்பாணியே
குறிகெடும் பரசமய விருள்கெடுங் கதிருதய
கொட்டியருள் சப்பாணியே. 7

(பி-ம்) பரப்பிய சரற்காலமே. நிரைபிணம்பட. பயிர்விளையவித்துவிளை.

நிமிருமங் கொடுமுடிக ளொடியவெங் கரிகரடி
நிற்குநிலை கெட்டோடவே
நெடியசங் தகில்பறிய மணிமுகங் திருகரையி
னெற்றிபல செற்றேடிமூள்

தமரமெங் கணுமுலவு நிலவுபைங் கமுகமுகில்
தட்டிவரு கோட்டாறுசூழ்
தழுவுசண் பையர்தலைவ வெழுதுசெந் தமிழ்விரக
கொட்டியருள் சப்பாணியே

அமரரஞ் சவிபரவு சரணயங் கயமுனிவ
ரற்புத கலிக்கோபநீ
ரடைச்சுகுண் டிகையருகர் குலபயங் கரவசுரர்
படிப்படக்கொய் கோபமூள்

குமரனன் புறுதுணைவ வரவெனும் பணிவலவ
கொட்டியருள் சப்பாணியே
குறிகெடும் பரசமய விருள்கெடுங் கதிருதய
கொட்டியருள் சப்பாணியே. 8

(பி–ம்) செற்ருேடிமீள். தமரமெங் கனுமுலவ.
பொடிபடக்கொய் கோபமுள்.

அறுபதங் திகழ்குமுத விதழ்திறங் தழுதழுது
துய்த்தது முலைப்பாலைவான்
அமரருஞ் சதுமறையு முனிவருங் தொழவினிது
பெற்றது திருத்தாளம்வாய்

முறுகுசெங் தழலினிடை தளிர்நிறம் பெறவெழுதி
விட்டது தமிழ்க்கோவைவான்
முறுவலென் புகள்பொதிவ தொருகுடங் கொடுவர
வழைத்தது மலர்ப்பாவைகார்

செறிவிசும் புழுதபொழின் மிழலையம் பதியர
னளித்தது படிக்காசுஞ்
இருவினங் கியமருகல் மருவுசெஞ் சடையரொடு
கற்றது விடத்தீர்வையாங்

குறுகிநின் பெருமைசொல வெனநலம் பரவுமுனி
கொட்டியருள் சப்பாணியே
குறிகெடும் பரசமய விருள்கெடுங் கதிருதய
கொட்டியருள் சப்பாணியே. ௯

(பி-ம்) நிலம்பரவுமுனி.

கழுமலந் திருவதிகை திருவலம் புரமருகல்
கற்குடி திருக்கோவலூர்
களர்புறம் பியமயிலை சிவபுரங் கடைமுடி
கருக்குடி திருக்கோடிகா
மிழலைவண் டுறைபருதி நியமவண் குடிசுழியல்
வக்கரை களப்பூர்கணை
விளமர்கொங் கணமிடவை திருவலஞ் சுழிதிரு
வரத்துறை திருச்சேய்ஞலூர்
பழனமம் பலமதுரை வளைகுளங் கொடுமுடி
யருட்டுறை திருப்பூவனூர்
பறியல்தண் டலைகயிலை வலிவலஞ் சிறுகுடி
பருப்பத மறைக்காடுசேர்
குழகர்தங் கழல்பரவ வுரியசெந் தமிழ்விரக
கொட்டியருள் சப்பாணியே
குறிகெடும் பரசமய விருள்கெடுங் கதிருதய
கொட்டியருள் சப்பாணியே. 10

(பி-ம்) திருவலம்புரி மருகல். விளமர்கோங் கணமிடை. கொங்கண மிடைதரு வலஞ்சுழி. கோகுளங் கொடுமுடி.

---

நான்காவது சப்பாணிப் பருவ முற்றிற்று.

---

## 5. முத்தப் பருவம்.

---

அலையுண் டமரர் விடம்பற்றி
யாடுஞ் சுடிகைப் பணுமகுடத்
தடல்வா ளரவந் தனிகோபித்
தழலா யிரம்வா யங்காப்ப

நிலையுண் டனவே மூலகடுக்கி
நிற்குங் கனகக் கிரிதிருப்பி
நீலப் பரவை கடைந்தநாள்
நெடுவா னவரும் நெய்யுண்டு

மலையுண் டுவரிக் கடலுண்டு
மண்ணுண் டவனு மண்ணுண்டு
மாளா வண்ணம் விடமுண்ட
மணவா ளன்றன் மனையாட்டி

முலையுண் டழுத கனிவாயான்
முத்தந் தருக முத்தமே
முத்தின் பந்த ருடையபிரான்
முத்தந் தருக முத்தமே.

(பி–ம்) வடம்பற்றி; வலம்பற்றி. தனிக் கோபித். நிலையுண் டவ்வே முலகடக்கி. நெடுவாசவனும். மணவாட்டி.

வழியுங் கரையிற் கழைமுத்து
மணியுங் கொழித்துச் சுழித்துவரும்
மாணி ரரசின் வடகரைவாய்
மண்ணு டாள விண்ணுட்டின்

இழியுங் கோயில் மகிழ்ந்திருந்த
மிழலைப் பெருமான் றிருவருளால்
இலகும் படிக்கா சினிதுபெறு
மிசையா கரனே மிசைத்தாவிப்

பொழியுந் தரங்கக் கடலாடைப்
புவியோ ரடங்கப் பரசமயப்
பொய்க்கே விழுந்து பொறிகலங்கிப்
போகா வண்ணந் தமிழ்மாலை

மொழியும் பவளக் கனிவாயான்
முத்தந் தருக முத்தமே
முத்தின் பந்த ருடையபிரான்
முத்தந் தருக முத்தமே. 2

(பி-ம்) புவியோ ரடங்காப் பரசமயப். நெறிகலங்கி.
மிசைத்தாலிப் பொழியும்.

எருக்கே புனலே கடிக்கொன்றை
யிணரே யரவே யிளம்பிறையே
யிவையே முடிக்குஞ் சடாமகுடப்
பெருமா னுலகுக் கினிதளித்த

தருக்கே தெய்வத் தமிழ்க்கொழுந்தே
தனிநான் மறையின் கிழங்கேபுன்
சமணப் பரிமேய் கரையுழக்குந்
தனிவா ரணமே திருஞானப்

பெருக்கே யடியார் பெற்றபெரும்
பேறே நாறுங் குமுதமே
பேணுந் தொண்டைச் செங்கனியே
பீடார் சோதிப் பவளமே

முருக்கே யனைய கனிவாயான்
முத்தந் தருக முத்தமே
முத்தின் பந்த ருடையபிரான்
முத்தந் தருக முத்தமே. 3

(பி—ம்) புன் சமயப் பரிமேய்.

கொத்துப் படுநாண் மலர்க்கூடை
குஞ்சி யாக மஞ்சனநீர்
கொள்ளுங் கலசம் வாயாக
மெல்லு மிறைச்சி யமுதாகச்

சித்தத் தெழுந்த பேரன்பாற்
சிலைக்கை வேடன் பணிசெய்யுந்
திருக்கா ளத்தி யிறைவர்பாற்
செம்பொற் சின்னம் பெற்றோனே

மத்தக் களிற்றுப் பணைமுத்தும்
வளைவாய் முத்துங் கழைமுத்தும்
மன்னுஞ் செங்நெற் றுண்முத்துங்
கன்னல் முத்தும் நிகரொவ்வா

முத்துப் பவளக் கனிவாயான்
முத்தந் தருக முத்தமே
முத்தின் பந்த ருடையபிரான்
முத்தந் தருக முத்தமே. 4

நடிக்கும் பெருமான் பணியாலே
நாபிக் கமலத் தொருமுனிவன்
நாட்டுங் கிரியிற் கயலொதுக்கி
நாமப் புலிவைத் தொருசெண்டால்

அடிக்கும் பெருமான் பிரியாத
வந்தப் புரத்துக் கழுகளித்த
அங்கைக் கமல மங்கையருக்
கரசி யுடனே யரசோட

இடிக்கும் பெருமான் மதயானை
வழுதிக் குரிய மந்திரநூ
லெண்ணுந் தலைமைக் குலச்சிறையார்
கெடுநா ளெண்ணு மெண்ணமெல்லாம்

முடிக்கும் பெருமான் சம்பந்தப்
பெருமான் முத்தந் தருகவே
முத்தின் பந்த ருடையபிரான்
முத்தந் தருக முத்தமே. 5

(பி-ம்) கயலொதுங்க. 'பெருமான்'.

(வேறு)

பிணமுடைச்செஞ் சுடலைநட்டம்
பயில்விருப்பம் பெருகவோர்
பிறைமுடிக்கும் பரமர்பக்கம்
பெரிதுவக்குந் தலைமைசேர்

மணமிருக்குங் குழலிசெப்பின்
றிருமுலைக்கண் பெருகுபால்
மருவியித்தெண் டிரைவளைக்கும்
புவிவளர்க்குங் குழவியே

ருணவுதத்தந் தவமெனக்கொண்
டுயிருருக்குண் டிகையினோர்
உடலுகைத்தங் கெதிர்வரக்கண்
டவருவட்டும் பரிசுசேர்

சணவரைக்குண் டரையுழக்குந்
தலைவமுத்தந் தருகவே
தமிழ்வளர்க்கும் புகலியத்தன்
றருகமுத்தந் தருகவே. 6

(பி-ம்) உடலுகைத்தங் கெதிர்வரைக்கண். உடல்புதைத்தங் கெதிர். குண்டிகையினோடுடல். குண்டெனாினைக்குந் தலைவ. சமணரை.

புளகமெய்த்தொண் டினர்பிறக்கும்
பிறவியச்சந் தளரவோர்
புனல்விழுக்கண் டலைபறிக்கும்
பொறியில்சுற்றந் தளரவே

அளவறுக்கும் பெருநதிச்சென்
றகலவெப்புந் தளரவே
அரனைவிட்டங் கரிமயக்குண்
டழிவழுக்குந் தளரமேல்

விளையரிற்குந் தவமில்பொய்ப்புன்
சமயமுற்றுந் தளரமுள்
வினைபடைக்குங் கலியிடுக்கண்
பெருகுவெப்புந் தளரவூர்

தளர்நடைக்கிண் கிணியரைச்செங்
குழவிமுத்தந் தருகவே
தமிழ்வளர்க்கும் புகலியத்தன்
றருகமுத்தந் தருகவே. 7

(பி-ம்) பிறவியச்சந் தளர்வுற. தளரமுன்வினை.

உவமைமுற்றும் பவளமொய்க்குந்
திருவுருக்கொண் டவனும்வே
றுருவுபச்சென் றவனிடப்பங்
குரிமையிற்கொண் டவளுநீ

டவலொடப்பந் திருவயிற்றங்
கடைசிவக்குங் களிறுமேல்
அமரர்தத்தஞ் சிறைவிடுத்தங்
கசுரரைக்கொன் றவனுமார்

துவலமொத்துஞ் சடையருக்கன்
புடையமெய்த்தொண் டினருனீள்
சுருதிமுற்றுந் திருவிசைப்பண்
டிருச்செவிக்கொண் டுருகவோர்

தவமில்புத்தன் றலையுருட்டுந்
தலைவமுத்தந் தருகவே
தமிழ்வளர்க்கும் புகலியத்தன்
றருகமுத்தந் தருகவே. 8

(பி–ம்) பவள மொக்குந்திருவுரு.

வினையுடைப்புன் சமணிருட்டின்
றிரள்குலைக்கும் பருதியே
விசயமுற்கொண் டெழுபவுத்தன்
றலைதுணிக்குங் கருவியே

மனதிடைப்பைங் கமலவட்டந்
தனிலிருக்கும் பிரசமே
மணிநகைச்செந் துவரிதழ்க்கொண்
டணிகொண்முத்தந் தருகவே

எனதிடுக்கண் களையமிற்கும்
படியெனக்கன் புடையதாய்
எனையடர்க்கும் பகையினுக்கும்
படையெனக்கன் புடையமா

தனமெனக்குண் டெனநினைக்குந்
தலைவமுத்தந் தருகவே
தமிழ்வளர்க்கும் புகலியத்தன்
றருகமுத்தந் தருகவே. 9

(பி-ம்) எனையடர்க்கும் பகையறுக்கும் படியெனக்கன்.

குறிப்பு:—இம் முத்தப் பருவத்தில் 9-திருப்பாடல்களே ஏடுகளில் உள. 10-ஆந்திருப்பாடல் இறந்து போயினதோ அன்றிப் பாடப் படவில்லையோ என்னும் ஐயம் நிகழ்கின்றது. இனி, வாரானைப் பருவத்திலே பதினொரு திருப்பாடல்கள் இருக்கின்றன. சிறு பறைப் பருவத்திலே உள்ள திருப்பாடல்கள் ஒன்பஃதே யாம். ஆராய்தற்குரியன.

---

ஐந்தாவது முத்தப் பருவ முற்றிற்று.

---

## 6. வாரானைப் பருவம்.

---

தென்றிக் கிலங்கு மலைத்தமிழின்
செவ்விச் செந்தேன் முகந்தகன்ற
தெய்வப் பொன்னித் திருநதியிற்
செழுநீ ராடிச் செங்கழுநீர்

ஒன்றிச் செந்தா மரையவர்த்தி
யுயருங் கமுகி னறும்பாளை
யுழக்கிப் பகலின் போர்தெல்லா
மங்கே யுலாவி யுயர்மகர

வென்றிக் கொடிவேள் தனக்கெடுத்த
திங்கட் கவிகைக் கதிர்வீச
வீசிக் குமுதப் பெரும்போதின்
வேரின் மணந்த பசுந்தென்றல்

மன்றிற் புகுந்து விளையாடும்
புகலிப் பெருமாள் வருகவே
வடநூற் பெருமாள் தமிழ்ப்பெருமான்
மறையின் பெருமாள் வருகவே. 1

(பி–ம்) பகலின் பொழுதை யெல்லாம். கொடிவேள் கைக்கடுத்த. புகலிப்பெருமான், வடநூற் பெருமான், தமிழ்ப் பெருமான், மறையின் பெருமான். 'வருகைப் பருவம்' என ஓர் பிரதியில் இருந்தது.

சிகரா சலப்பொற் சிலையாளி
யிருக்குந் தெய்வத் தோணியாற்
றிசையிற் றிசையின் முறைமுறையி
னொலிக்குஞ் சங்கின் சேனையாற்

புகரார் பகழிப் பூமாரன்
றுவசத் தெடுத்த சுறவத்தாற்
பூணார் மணியு நித்திலமும்
வெயிலு நிலவும் பொழிதலாற்

றுகிரார் கனிவா யின்னமுதுந்
துங்கக் கடல்வேல் விழிநஞ்சுஞ்
சொல்லார் கமல மதிவதன
நல்லா ருடனே தோன்றுதலான்

மகரா லயம்போன் மிகவிளங்கும்
புகலிப் பெருமாள் வருகவே
வடநூற் பெருமாள் தமிழ்ப்பெருமாள்
மறையின் பெருமாள் வருகவே. 2

(பி-ம்) யிருந்த தெய்வத் தோணி. பூணு மணியும். துங்கக் கடைவேல்.

சடங்கின் படியே யயன்புரியச்
சக்ரா யுதன்கை நீர்வார்ப்பச்
சந்த்ரா தித்தா விளக்கெடுப்ப
விந்த்ரா தியர்கள் துனிபோற்றப்

படங்கொண் டகன்ற நிதம்பதடப்
பச்சைப் பிடியைக் கலியாணம்
பண்ணும் பெருமான் திருச்செவிக்குப்
பாடும் பெருமாள் வருகவே

விடங்கொண் டகன்ற கடைசிவந்து
வேலைப் பழித்துச் சேலடர்த்து
வெல்லும் புருவச் சிலைவளைத்து
விடுகா தளவுந் தாவடிபோய்

மடங்குங் கண்ணார் நடம்பயிலும்
புகலிப் பெருமாள் வருகவே
வடநூற் பெருமாள் தமிழ்ப்பெருமாள்
மறையின் பெருமாள் வருகவே. 3

(பி-ம்) பண்ணும் பெருமான்.

பாளைக் கமுகின் மிடறொடியத்
தாவிக் கதலிக் குலைசிதறிப்
பாய்ந்து மறித்தும் புனல்புகுந்தும்
பங்கே ருகத்தின் பரியபசுந்

தாளைத் துகைத்து மலருழக்கித்
தாதுட் படியுஞ் சுரும்பெழுப்பித்
தரளஞ் சொரியுஞ் சலஞ்சலத்தைத்
தள்ளிக் கரையிற் சதகோடி

ஆளைக் கறுவிச் சேலினத்தை
யடர்த்துத் திசையின் பதின்காதம்
அகன்ற மடுவி னிடைமடங்காத்
தானே கைக்கொண் டஞ்சாது

வாளைக் களிறு விளையாடும்
புகலிப் பெருமாள் வருகவே
வடநூற் பெருமாள் தமிழ்ப்பெருமாள்
மறையின் பெருமாள் வருகவே. 4

(பி-ம்) பாய்ந்து மறித்துப் புனல்புகுந்து.

படிக்குந் தெய்வத் தமிழ்மதுரைப்
பதியிற் கனலைப் புனல்செய்யும்
பச்சைப் பதிக முடையவர்பாற்
பச்சை மாலை நச்சரவு

முடிக்கும் பெருமாள் அரத்துறையின்
முத்துக் குடையா வடுதுறையின்
முடியாச் செம்பொற் கிழிபெற்ற
முனிவர் பணிவா ரணமோங்க

அடிக்கும் புரவி யிரவிசூழ்
றண்டம் பொருதக் கதிர்மாடத்
தரம்பை யனையார் கைக்கமலத்
தஞ்சொற் கிளிகள் திருப்பதிகம்

வடிக்குங் கனக மறுகுசூழ்
புகலிப் பெருமாள் வருகவே
வடநூற் பெருமாள் தமிழ்ப்பெருமாள்
மறையின் பெருமாள் வருகவே. 5

(பி-ம்) பணிவா ரணமொதுங்க. சூழன் றண்டம் பொருத கதிர்மாடத்.

பரம்பை யடிப்பார் கயல்பிடிப்பார்
பாகு சமைப்பார் வட்டமைப்பார்
பாத்தி வகுப்பார் களந்தொகுப்பார்
பாடி நடுவார் விதையிடுவார்

குரம்பை யுடைப்பார் மடையடைப்பார்
கூலி கொடுப்பார் போர்ப்படுப்பார்
குமுதங் கொய்வார் கரைசெய்வார்
குவளை களைவார் சேறளைவார்

கரும்பு கழிப்பார் பழங்கிழிப்பார்
கதிர்கூ டெடுப்பார் கணைதொடுப்பார்
கலப்பை நிரைப்பார் திரைதிரைப்பார்
கால்வாய் மறிப்பார் தாள்பறிப்பார்

வரம்பு குறிப்பா ரொலியடங்காப்
புகலிப் பெருமான் வருகவே
வடநூற் பெருமான் தமிழ்ப்பெருமான்
மறையின் பெருமான் வருகவே. 6

(பி–ம்) போரெடுப்பார்.

(வேறு)

முருகு கதிரில்விரி முளரி தருதெரியல்
முழுகு கனகபுயன் வருகவே
முதலி மறைமுதலி கமல மகன்முதலி
முனிவர் தவமுதலி வருகவே

அருந்து மலரயனு மரியு மிடவுமையை
யணையு மரன்மதலை வருகவே
அலைய வருபுனலி லனலி லுரையழியு
மமணர் வயிறுகரி வருகவே

சிறுகு மிடையசைய வளக மசையவொளி
சிதறு தரளவட மசையவார்
திகழு முலையசைய வுயிர்க ளசையவிழி
செருகு மகரகுழை யசையமா

மறுகு தொறுமகளி ரசைய வசையவரு
புகலி வருகுரிசில் வருகவே
மலையின் மகளமுத கலச முலையருவி
பருகு தமிழ்விரகன் வருகவே. 7

(பி-ம்) முருகு கதிர்விரவு. வுரகமசையவொளி சிதறு தரளவடமசையவே. செறியு முடலினிடை யுயிர்களசைய.

சுடலை யிடமுமிகு சுருதி மறையுமெழு
துமனி தருமலகை யின்முனீர்
சுழலு முடியுமுடி செருகு பிறையுநிறை
தொணியை யுதவுதம ருகமும்வார்

கடலின் விடமும்விட முடைய மிடறுநடை
கடிய தொருதவள விடையுமா
கரியி னுரியும்வரி யரவு மினிதுடைய
கயிலை மலையன்மகன் வருகவே

உடலை யடுபகழி மதன னினிதுபெற
வுயிரை யவன்மனைவி பெறவிடா
வொளியை யிலகுமுது முளரி வனிதைபெற
வுலகை விழியிணைகள் பெறவரோ

மடலை யிளைஞர்பெற மகளி ரழகுபெறு
புகலி வருகுரிசில் வருகவே
மலையின் மகளமுத கலச முலையருவி
பருகு தமிழ்விரகன் வருகவே. 8

(பி—ம்) சொருகுபிறையு. தமருகமுமார். கடலில் விடமும். பெறவொரேர் மடலை.

இளைய வறுசமய முருட ருரைசிறுக
விறைவ ருரைபெருக வருகவே
இகலி யுலகுபொரு கலியின் வலிதளர
வியலொ டிசைவளர வருகவே

அளையு மடியவரை யமரர் கிளைவளைய
வரச னுடல்நிமிர வருகவே
அழகு துவருடைய பிடகன் முடிகுறைய
வரிய மறைநிறைய வருகவே

விளையவிளை ஞிமிறு புதிய விசையின்வழி
விரகி னெடுமுரல முரலவான்
வெளியு மிருளவிரு ளகல நிழலுலவி
வினைசெய் விழியிளைஞ ருயிரெலாம்

வளைய மகளிர்சிலை மதனை யரசிவிடு
புகலி வருகுரிசில் வருகவே
மலையின் மகளமுத கலச முலையருவி
பருகு தமிழ்விரகன் வருகவே. 8

(பி-ம்) முரடருரை.

அகலு முதுபரவை பொதியு முலகுதனி
லரிய பெருமைவர வருகவே
அரிய தரளவொளி பெருகு திருவிழலி
லமரு மழகுவர வருகவே

மிகவு மமணர்பொரு மவையி னவரவர்கள்
விளியும் விரகுவர வருகவே
வெறிகொள் குவளையிதழ் நயன வனிதையுடன்
விடையி லிறைவன்மகன் வருகவே

இகலு மிருபுருவம் வளைய வளகமுட
னிதய கமலமுகை புதையவா
யிதழி னிறமுடைய விளைய முலைகவர
மிடையு மிடைதுவள வெழுதொறு

மகளிர் மகிழ்நரொடு கலவி யமளிபுகு
புகலி வருகுரிசில் வருகவே
மலையின் மகளமுத கலச முலையருவி
பருகு தமிழ்விரகன் வருகவே. 10

(பி-ம்) விளையும் விரகு. விளைய ருளமகிழ
விடையு மிடைதுவள.

கலியின் வலிபொருத னினது புகழ்தவிர
வொருவர் புகழெனது செவிபுகா
கருத வரியவிரு சரண மலர்தவிர
விதய மொருநினைவு கருதிடா

ஒலிகொள் புகலிவலம் வருவ தொழியவினி
யொருவ ரிடவகையி னிடைசெலா
வுனது திருநிலையை யறியு மெனதுவிழி
யொருவ ருருவறிய விழையெடா

பலிகொள் சமண்முடுகு னினது பெயர்தவிர
வொருவர் பெயரெனது மொழிபடா
படியி லுனைவளையு மெனது தலையமரர்
பலரு மிகவரினும் வளைவுறா

வலிய வெமைவினவி யடிமை கொளவமையும்
வருக மறைமுதலி வருகவே
மலையின் மகளமுத கலச முலையருவி
பருகு தமிழ்விரகன் வருகவே. 11

(பி—ம்) ஒலிகள்புகலி. சமண்முழுகு. படியி லுனை வளையு மெனது தலையமரர் பலரு மெதிர்வரினும்.

---

ஆறுவது வாரானைப் பருவ முற்றிற்று.

## 7. அம்புலிப் பருவம்.

---

கரிய பீலியு மருகர்தந் தலைகளும்
பாய்களுஞ் சுறுநாறக்
காதும் வெப்பினாற் பட்டகண் கலக்கமுங்
கண்டருட் கண்சாத்தி

வரிகொள் வார்கழல் நின்குலத் தரசன்மேல்
மன்னுசூ னுடன்தீர்த்து
வாழ்வு தந்தவ னென்பது முணர்ந்திலை
மதியிலா யதுநிற்கப்

பரிய போர்வையாற் சிவரந் தாங்கிய
பவுத்தனைத் தலைவீழப்
பார்த்த கோபமின் றுன்னையும் பார்க்கிலோர்
பார்வையிற் பணியுண்டோ

அரிய நாயக னுடனினி தாடுதற்
கம்புலி வருவாயே
அழுது வாழ்வுதந் தருளின னழைத்தனன்
அம்புலி வருவாயே. 1

வாவு தண்புனல் வளவயல் தழுவிய
மருகல்மா நகர்தன்னில்
வணிக னைப்பணி யெயிறுகொண் டுயிருண
மாண்டநாள் வணிகேசன்

தேவி புண்படு நெஞ்சுடன் படுதுயர்
திருமலர்க் கண்சாத்தித்
திரிய வாருயிர் கொடுத்தவ னிவன்றிரு
வடியிணை வீடாமே

கூவு தெண்டிரை கடைந்தநாள் மின்மொழிக்
கோளினுற் றமதாகங்
குறைந்த நாகங்க ளிரண்டும்வந் துன்னுடல்
கூடவன் றுமிழ்ந்தாலும்

ஆவி யுன்னதா மாகமு முன்னதாம்
அம்புலி வருவாயே
அமுது வாழ்வுதந் தருளின னழைத்தனன்
அம்புலி வருவாயே. 2

(பி—ம்) வந்துயிர் கூடவின் டுமிழ்ந்தாலும்.

உரைசெய் கோல்பிடித் தூன்றுவா ரின்றியே
ஓடத்தை வருகென்றான்
உயர்ந்த வாண்பனை பெண்பனை யாகவு
மொருவிசைக் கண்பார்த்தான்

திரைசெய் வார்புனல் வைகையி னெதிர்செலத்
தன்றிரு வேடிட்டான்
செய்ய பாலகன் செய்யுமிச் சேதிகள்
யாவர்க்குந் தெரியாது

விரைசெய் தாமரைக் கண்களால் நின்கறை
மேனியைப் பார்த்தானின்
மேல்வ ரும்பழி கிடக்கநீ துய்மையாய்
விளங்கலாம் விண்ணோருக்

கரச னெனவிடுக்கினும் விடுக்குமின்
றம்புலி வருவாயே
அமுது வாழ்வுதந் தருளின னழைத்தனன்
அம்புலி வருவாயே. 3

(பி—ம்) பிடித் தூன்றுவா ரன்றியே. கண்களா லுன்கறை.

தழைத்த சோலைசூழ் மயிலையம் பதியினில்
சண்பகப் புதுக்கொம்பில்
சாரும் வல்விடந் தீண்டலு முயிர்விடுந்
தத்தைதன் றிருவென்பு

குழைத்த சந்தகில் வளவிய குங்குமக்
கொங்கைக ளுடன்செம்பொற்
குடத்தில் வந்தெழச் செந்தமிழ்த் திருவிசைக்
கொத்தவ னிவனுன்னை

இழைத்த வன்பணப் பாம்பின்வாய்ப் பட்டுநீ
யாருயி ரிழந்தாலும்
இனிய செஞ்சொலா லுன்னையு மிங்ஙனே
யாவரு மெதிர்கொள்ள

அழைக்க வல்லவ னுடனினி தாடுதற்
கம்புலி வருவாயே
அமுது வாழ்வுதந் தருளின னழைத்தனன்
அம்புலி வருவாயே. 4

தேன லம்புதண் கொன்றைதுன் றியசடைத்
தேவர்கள் மணவாளன்
செம்பொன் மேனியைப் பகிர்ந்துகொண் [டிருந்தவள்
திருமுலைப் பெருகும்பால்

ஞான முண்டுதெண் டிரைப்புவிப் பரப்பினில்
நடத்திய வறுபத்து
நாலு வண்கலை நிரப்பிய முனியிவன்
நரந்தைநாண் மலர்நாறுங்

கான லங்குழற் காடுதோய் மதர்விழிக்
கவுரியர் பிரிவின்கட்
கண்ட கண்டிட மெங்குமின் றேங்கிடக்
கழிவிலாப் பெருமான்முன்

ஆன நின்கலை குறைவற நிரப்பலாம்
அம்புலி வருவாயே
அமுது வாழ்வுதந் தருளின னழைத்தனன்
அம்புலி வருவாயே. 5

(பி-ம்) காதுதோய் மதர்விழிக்கவுரியர் பரிவின்கட். நின்றோங்கிட.

கந்த னுரையுந் தமையனு ரையும்பெறு
பேதையும் பெம்மானுங்
கழிவி லாதபே ரின்பமே யிணிதுறக்
கடையுகப் பெருவெள்ளம்

வந்து கோலுநா ளுலகெலாந் தனித்தனி
மயங்கவு மயங்காது
மன்னு தோணியாய் மிதந்ததூ ரிவன்பதி
மாலுநான் முகனும்பேர்

இந்தி ராதியுஞ் சுரர்களு முனிவரு
முலகுளோ ரெல்லாரும்
எங்கு ளார்கொலோ வென்னவப் பிரளய
மின்னமும் புவிகோக்கும்

அந்த நாளிலுந் தோணியைப் பற்றலாம்
அம்புலி வருவாயே
அமுது வாழ்வுதந் தருளின னழைத்தனன்
அம்புலி வருவாயே. 6

(பி-ம்) முனிவருஞ் சுரர்களும்.

(வேறு)

பிரச முந்திய மலரின் வந்தெழு
பிரமர் தம்பத மருளவோ
பெருகு தெண்டிரை நடுவு கண்டுயில்
அரிபெ ரும்பத மருளவோ

அரசெ னும்புகழ் நிலைபெ றும்படி
யமரர் தம்பத மருளவோ
அகல்வி சும்பினி லிருளொ துங்கிய
பகல வன்பத மருளவோ

விரைத தும்பிய பழன வெங்குரு
வுடைய செந்தமிழ் விரகன்மேல்
விதிய டங்கலு மழிய வந்தெனை
வினவி யென்கிளைக் கிவரெலாம்

வரிசை தங்கிட வடிமை கொண்டவன்
வளமை தங்கிய புகலியான்
வருக வம்புலி வருக வென்றனன்
வருக வம்புலி வருகவே. 7

(பி–ம்) பகலவன் பணி யருளவோ. யென்கிளை கிளையெலாம்.

அடல்ப டுஞ்சத வித்ழ்வி ரிஞ்சனை
வருக வென்றில னனுகொளு
அமர்செய் கஞ்சனை விளைசெய் வஞ்சனை
வருக வென்றில னலைகடா

மூடைய வெங்களி றுடைய வன்றனை
வருக வென்றில னிருளெலா
மூதிர வங்தெழு கதிர வன்றனை
வருக வென்றில னுடுவெலாம்

இடைவி டும்படி நெடுகு சண்பக
வடவி துன்றிய மூகையெலாம்
இதழ்வி ரிந்தநி லொழுகு தண்புன
லலையெ றிங்தெழு கழனிவாய்

மடைவி டும்படி பெருகு சண்பைய
ரதிபன் வெங்குரு வுடையகோன்
வருக வம்புலி வருக வென்றனன்
வருக வம்புலி வருகவே. 8

அளவில் தொண்டினர் பெருமை கண்டும
தடிமை யென்றடி பணியலாம்
அரிய வன்றிரு விசைமு கந்திரு
செவிநி றைந்தறி வறியலாம்

இளைய மங்கையர் வதன சந்திர
ருறவெ னும்படி திரியலாம்
இரவெ ழுக்தது பகலொ துங்கிய
தெனவ ருங்குறை தவிரலாம்

ஒளிம ழுங்கிட முனியி டும்பழி
யிலதெ னும்படி புகுதலாம்
உலகி னுன்குல வரசெ னும்படி
யுடல்வ ளைந்தது நிமிரவாம்

வளைசொ ரிந்தன தரள மெங்களும்
வளமை தங்கிய புகலியான்
வருக வம்புலி வருக வென்றனன்
வருக வம்புலி வருகவே. 9

(பி–ம்) பெருமை கண்டுதம்மடிமை. தெனவெ
ழுங்குறை. முனியிடும்படியிலதெனும்படி.

கயிறு கொண்டரி யயனு டிந்திரர்
கணம டங்கலு மகரமேய்
கடல்க டைந்தமு துவிரும்பிய
சலதி யின்கணோர் பகையினுல்

எயிறு கொண்டுன துடல்வி ழுங்குவ
னெனவ ரும்படி வரவுநீ
டியபெ ரும்பணி யுடன்வ ரும்படி
பரிப வஞ்செய லருமையோ

வெயிற ரும்பக விரவு தந்தலை
மயிர்பி டுங்குதல் தொழிலதாய்
விழும் மண்கிளை கரிச ரும்படி
விரக றிந்தில குடையதாய்

வயிறு வந்தெனை யடிமை கொண்டவன்
வளமை தங்கிய புகலியான்
வருக வம்புலி வருக வென்றனன்
வருக வம்புலி வருகவே. 10

(பி-ம்) விழுங்குவ தெனவரும்படி.

---

ஏழாவது அம்புலிப் பருவ முற்றிற்று.

---

## 8. சிற்றிற் பருவம்.

---

சுழியா லெரிக்குந் திரையுகைத்த
சூல்வெண் சங்கு நீலமலர்க்
கழியால் வந்து வயல்புகுதுங்
காழிக் கரசே முலைசுரந்த
மொழியான் முடியாப் பழம்பொருளை
முன்னே காட்டி யுலகமெல்லாம்
அழியா வகைவந் தாட்கொண்டாய்
அடியேஞ் சிற்றில் அழியேலே. 1

(பி-ம்) முலைசுமந்த மொழியான். அடியோம்.

சுழிக்கும் பெருஞ்சா றலையெறிய
நாறு யிரம்பேர் சூழ்கரும்பு

கழிக்கும் பழனக் கழனிசூழ்
காழிக் கரசே வேதத்தைப்

பழிக்கும் பொல்லாப் பரசமயப்
பகட்டைப் பால்வாய்ப் பசுந்தமிழால்

அழிக்கும் புகலிப் பெருமானே
அடியேஞ் சிற்றி லழியேலே. 2

(பி—ம்) சாற்றலை யெறிய.

பிடித்தார் பிடித்த கதியேனின்
றிட்ட பிண்டங் தின்றவமே

தடித்தார் மெலியத் தமிழ்பாடுஞ்
சண்பைக் கரசே தனியேற்றின்

கொடித்தா னுடைய பெருமான்பங்
குடையா ளுடைய குலமகனே

அடித்தா மரையின் முத்துறைப்ப
அடியேஞ் சிற்றி லழியேலே. 3

சாதித் தெமது பாவமெல்லாந்
தள்ளித் தள்ளா டாவகையே

பேதித் தடியா ரடிமைசெய்ய
வழியாட் கொண்ட பெருமானே
சோதித் தயன்மால் தேடரிய
தோன்றாப் பொருளைத் தோன்றுவித்த
ஆதித் தியனே தமிழ்க்கரசே
அடியேஞ் சிற்றி லழியேலே. 4

(பி-ம்) ரடிமைசெய. தேடியநாள் தோன்றாப் பொருளை.

வழுதி வெதுப்பு மவன்கூனு
மாற்றி மண்மே லொருநாளும்
பழுதி லாத திருநீறும்
பஞ்சாக் கரமு நிலைநிறுத்தி
எழுதொ ணாத நான்மறைக்கும்
அடியேங் கட்கு மெல்லார்க்கும்
அழுது வாழ்வு தந்தோனே
அடியேஞ் சிற்றில் அழியேலே. 5

(பி-ம்) கூனு மவன்வெதுப்பு. அடியேங் களுக்கு.

(வேறு)

வருகதிர் விட்ட வெழுபரி வழியை
விலக்கி யெழுபொழின்

முருகெழு கொச்சை வளநகர் முதல்வ
தலத்தி ளெடுபொரு
மொருகவி வெற்றி யிதுவல வுலகி
னிருக்க ணிதுவல
அருக ரிருக்கை யிதுவல வடியவர்
சிற்றி லழியேலே.

பழிகள் பெருக்கி மயிர்பறி பழகு
முருட்டு வமணரை
வழிவழி கட்டி யுயர்கழு மரத்தி
லிருத்தி யழல்புக
விழிகள் சிவக்கும் வழுதிதன் வினையை
விலக்கி யுடல்வளை
வழிய நிமிர்த்த தவமுனி யடியவர்
சிற்றி லழியேலே

(பி—ம்) வளைவழியை நிமிர்த்த.

எழுபுவி பெற்ற திசைமுக னிலகு
சிரத்தி னரனிசை
மொழியு மிருக்கி னுயர்தவ முனிவர்
மனத்து முளரியில்

வழுதி யுயிர்த்த முதுகினில் மகளிர்
கையறிக் கணியினில்
அழகெழ வைத்த வடியிணை யடியவர்
சிற்றி லழியேலே. 8

(பி-ம்) மறுக்கி லுயர்தவ.

மறுவில் தமிழ்க்கோர் விளைபுலம்
மலருல குக்கு மனவலி
முறுகு கலிக்கு முதுபகை
முதன்மை மறைக்கோர் தனிமுதல்
துறுமம ணர்க்கோர் வயிறெரி
சுருதி யிசைக்கோர் புகலிடம்
அறுமுக வற்கோ ருறுதுணை
யடியவர் சிற்றி லழியேலே. 9

(பி-ம்) தமிழ்க்கு.

வழுதி பிழைக்க வருளிய
மதுமல ரொத்த விணையடி
புழுதி படைத்த தெனவுமை
பொடியினு மிச்சை யமணுடல்
கழுது வெறுக்க வுயிரொடு
கழுவி லிருத்தி யுலகினை

யமுது வளர்த்த தவமுனி
யடியவர் சிற்றி லழியேலே. 10

(பி-ம்) பொடியிலு. கழுகு.

எட்டாவது சிற்றிற் பருவ முற்றிற்று.

## 9. சிறுபறைப் பருவம்.

கருதரிய முத்தி தருகாரே
கலைகணிறை வுற்ற மறைவேரே
பொருகலி துணித்த புகர்வாளே
புவனமகள் பெற்ற பெரும்பேறே
அரியவிசை கட்டு மடுபாகே
அதிமதுர மிக்க தெளிதேனே
திருமுலை சுரக்க வருபாலே
சிறுபறை முழக்கி யருளாயே. 1

(பி-ம்) பெறுபேறே.

அளியின முழக்க வொருபாலே
வணிவளை முழக்க வொருபாலே
இளியின முழக்க வொருபாலே
இடையொலி முழக்கும் வளநாடா

துளிர் புன லகத்தி னிடையேவாழ்
குமுத மலரொரத்த விதழாலே

தெளிதமி ழுரைத்த பெருமாளே
சிறுபறை முழக்கி அருளாயே. 2

(பி—ம்) அளியிசை முழக்க. கிளிமிசை. பெருமானே.

அருகரொடு புத்தர் குலகாலா
அழல்வலி தவிர்த்த தமிழ்வீரா

முருகுகமழ் கொச்சை வளநாடா
முடுகுதிறல் மிக்க கவிகோபா

பருவரையை யொத்த திரடோளா
பரனையறி வித்த விரலாளா

திருவிசை யளித்த கனிவாயா
சிறுபறை முழக்கி யருளாயே. 3

இனவமணர் பொய்ச்சொல் பெருகாமே
யெழுகலி தலத்தை நலியாமே

மனுவழி பிழைக்க நடவாமே
வழுதியுடல் வெப்பி லுருகாமே

முனிவர்கள் தவத்தை யொழியாமே
முதன்மறை வழக்கு மழியாமே

தினகரனை யொத்த வொளியானே
சிறுபறை முழக்கி யருளாயே. 4
(பி—ம்) மனுநெறி.

உவரெழு மளக்க ருவராமே
யுயர்கதலி விட்ட கனியாருய்
நவரத மளிக்கும் வயலாலே
நலமருவு கொச்சை நகரானே
அவகதியி லுற்று மெலியாமே
யடியவர் பிழைக்க வருளாயே
சிவகதி யளித்த பெருமானே
சிறுபறை முழக்கி யருளாயே. 5

(பி-ம்) மனக்கருவராமே. நவரசமளித்த. அருளாலே சிவகதி யளித்த.

(வேறு)

எழுதுவன கொடிகளொடு கொடியுமிடை நெடுமறுகி
லெழில்கொள் ளகத்திரு ளின்வாய்
முழும்தியமிருபொழுது முலவவிளை ஞர்கள்வதன
முளரியலர் கொச்சை நகராய்
வழுதிதெரி தருதமிழும் வளருமிய லிசைநடமும்
வடமொழியு மிக்க பொருள்சேர்
செழுமறையு மழகுவர வழுதகிரு நிலையழக
சிறுபறை முழக்கி யருளே. 6

(பி-ம்) மறுகிலெதிர்கொள். மதியுமிருபொழுது.

புவனமுழு துடையதிரி புரையமலை விமலைமுலை
பொழியமுத தருத்து புதல்வா

தவனகுல பதிமகட னிதயமகிழ் வுறமதுரை
தனிலமண ணறுத்த சிறுவா

அவனிமுத லுலகமுழு தடைவினரு ளியவயனு
மரியுமறி தற்க ரியதோர்

சிவனையிவ னெனவிரலி னுதிகொடரு ளியமுனிவ
சிறுபறை முழக்கி யருளே. 7

(பி-ம்) யமுதருந்து. அவனிமுழுதுலகமுழுதுவருளிய. நுதிகொடளவிடுமுனிவ.

முறுகுதமி லிடைகுளிர மலைமகடன் முலைகுலவு
மொழியெழுதியிட் டுத்தோர்

குறுகியெதிர் செலவமணர் வயிறெரி செலவினிமை
கொளவிய லுரைத்த முனிவா

அறுகுநிறை மலரிதழி யலையினதி நகுதலையொ
டரவுவெள் ளெருக்கி னுடனே

சிறுகுபிறை பொதிசடில முடியிறைவர் தருபுதல்வ
சிறுபறை முழக்கி யருளே. 8

வருநெறியி லமணர்கழு வினில்மடிய வழுதியுடல்
வளைவினை நிமிர்த்து லகுளோர்

கருநெறியை யகலவரு ளதிமதுர கவிதைதரு
கவுணியர் குலக்கு ரிசிலே

ஒருநெறியை யருள்பரனு முமையுமிமை யவர்இளைய
முனதுபதி கொச்சை யுடன்வாழ்
திருநெறியு மடியவரு மறையுமுய மிகவினிது
சிறுபறை முழக்கி யருளே. 9

---

ஒன்பஃதாவது சிறுபறைப் பருவ முற்றிற்று.

---

## 10. சிறுதேர்ப் பருவம்.

---

கோடு படைத்த வகிற்பல காடு
முறித்து முகிற்படலம்
குத்தி மணித்தலை தத்தி மணித்திரள்
கொள்ள முகந்துபணிச்

சேடர் முடிப்பிடர் வைத்த தலங்குழி
யக்குதி கொண்டுவனச்
சேவ லுகைத்தவ னென்ன நிலத்தை
யகழ்ந்து நிகழ்ந்துவிடாப்

பாடு பனிப்படை பாய மதக்கடல்
பாய வனக்கொடியோர்
பள்ளி யெடுத்தெறி முள்ளியி னிக்கரை
யக்கரை யிற்செலவென்

ரோட மழைத்த பசுந்தமி ழாளி
யுருட்டுக சிறுதேரே
உலகுடை யாளுத வுந்தனி யானை
யுருட்டுக சிறுதேரே. 1

(பி—ம்) கொள்ளை முகந்து பணிச் சேடர். குழியக் குழிகொண்டு. பாடுமணிப்பெடை பாயுமதக்கடல்பாய வணக்கொடியோர்.

தக்க வரைப்பணி கொண்ட வரைக்கழல்
தந்தவ ரைக்கதிர்வாள்
தானவ னுக்கருள் செய்த வரைப்புர
மான தழற்புகவே

நக்க வரைத்தனி நட்டு வரைக்கன
கக்கிரி பெற்றவள்பால்
நல்ல வரைச்சிலை வில்லவ ரைக்கரு
நாரண னுக்கரிதா

மிக்க வரைக்கம லத்தவ ரைத்தலை
கொண்டவ ரைப்படிசூழ்
வேலை விடத்தினை யுண்டவ ரைக்கதிர்
பாலையு நெய்தலுமே

யொக்க வுரைத்த பசுந்தமி ழாளி
யுருட்டுக சிறுதேரே
உலகுடை யாளுத வுந்தனி யானை
யுருட்டுக சிறுதேரே. 2

(பி—ம்) திகழ் பாலையு நெய்தலுமா யொக்க.

திண்மை படைத்த கயற்கொடி மாறன்
வெதுப்பொடு கூனியிரச்
செய்த மருந்து செழுந்தமிழ் வல்லி
தழைக்க விருத்தியதோ

வெண்மை படைத்த வெறும்புட லாக
நிறுத்திய வேதகனோ
வேத முடித்த பழம்பொரு ளுண்மை
விளைத்தெழு வித்தகலா

வண்மை புதுக்கிய கற்பக மன்பர்கள்
வைத்த சரக்கறைகூழ்
வல்லம ணர்க்கு வழிப்பகை யீசன்
மனத்து மகிழ்ச்சிவிடா

துண்மை விளைத்த சிவக்கவி கோப
னுருட்டுக சிறுதேரே
உலகுடை யாளுத வுந்தனி யானை
யுருட்டுக சிறுதேரே. 3

(பி-ம்) விருத்தியவோ. வேதகனல். வேதமுடிந்த. சிறுக்கவிகோப.

ஆதி யுகந்தனி லன்னமு மேனமு
மன்று தலக்கரிதா
யங்ஙு னினைப்புற விங்ஙு னெமக்கருள்
செய்தவ னவ்வுருவிற்

பாதி யுகந்தவள் சீதள நித்தில
மாலை முலைக்கலசப்
பாலினை வெங்குரு மாநகர் நின்று
பரிந்தமு துண்டமுதாய்

வேதமு மங்கமு மாதி புராணமு
மெய்த்தமிழ் நூல்களினுல்
வேலை பொழிந்தன சோலைக ளெங்கும்
விளங்க விளங்கவிரித்

தோதுத லன்றி யுணர்ந்தருள் பந்த
னுருட்டுக சிறுதேரே
உலகுடை யானுத வுந்தனி யானை
யுருட்டுக சிறுதேரே. 4

(பி—ம்) முதற்கரிதா மங்க ணிமைப்பற. நமக்கருள். துண்டமுதால். வேலை புரந்தின: பொருந்தின. பந்தனுருட்டுக.

பொருளி லகத்தொடு வருமொரு புத்தன்
முடித்தலை யுருளநிலம்
பொங்கு கருங்கலி நரகர் பிலக்குழி
புக்குரு ளத்திருநீ

றருளது பெற்றது வார்பிணியாகவு
மப்படி யுருளநிலத்
தானுரு விற்பனை பெண்ணுரு வாயத
னிற்பழ முருளமறைக்

குருளை பயப்பட வெங்கனல் போலழல்
பொங்கு கொழுந்தெழுசெங்
குருதி படைத்துல கஞ்ச விருட்டெழு
கோல முடைக்கொடியோன்

உருள வுருட்டிய சேவகன் மைந்த
னுருட்டுக சிறுதேரே
உலகுடை யாளுந வுந்தனி யானை
யுருட்டுக சிறுதேரே. 5

(பி-ம்) நாகர் விலக்குழிபுக்கருள. பெற்றணிவார் பிணியானது. வாகி யதிற்பழ. குஞ்சி படைத்துல கஞ்ச மிரட்டிய.

(வேறு)

பருவே ரகிற்குறடு தருசேற தப்பிமிகு
பனிநீ ருழக்கு மிளைஞர்
பழியே துடக்குமிள முலைகாண நிற்கிலிளைவு
படிறே முடிக்கை தவிரா

உருவே படைத்துலகு ளுறைகா முகர்க்குடலி
னுயிர்பேணி நிற்க நினைவே
தொளியீ ரெனப்புனையு மணிநூ புரத்தொகுதி
யொளியா ரரத்த விதழார்

மருவே கழிக்குவளை மலரே யெனப்பகழி
வடியே யெனப் பகருமா
வடுவே யெனக்கொடிய கடுவே யெனத்திரியும்
விழியால் வளைத்து மடவார்

செருவே துவக்கிவரு பிரமா புரத்ததிப
சிறுதே ருருட்டி யருளே
திருவான வட்டிகிறை திருஞான மெய்க்குழவி
சிறுதே ருருட்டி யருளே. 6

(பி—ம்) குழக்கி யிளைஞர். படைத்துலகி லுறை. தொழியிரென. தொழியாதரத்த விதழா மருவே தழீ இக்குவளை. தனப்பகழி.

கருமா முகிற்படல முழுரு வகிற்பணைக
ளொடியா விடிக்கு ரல்கள்போற்
கதரு மதக்களிறு சிதரு மலைத்தலைகள்
கடவா விசைப்ப ரவைசூழ்

மருமா மடற்கமுகை வளையா மலர்க்கமல
மடுவூடு புக்கு மகிழா
வருகா விரித்திவலை வயல்தாவு கொச்சைதிகழ்
வளநாட மிக்க வொளிகூர்

பருமா மருப்பிளக நுரைவாய் குதட்டிவரி
வளைநீ ரளக்கர் புடைசூழ்
படிமா சுணத்தளவு நிலைபேர வெட்டரிய
படர்சோதி நச்சி நெடுநாள்

திருமா லளப்பரிய பெருமா னளித்தமுனி
சிறுதே ருருட்டி யருளே
திருவான வட்டிகிறை திருஞான மெய்க்குழவி
சிறுதே ருருட்டி யருளே. 7

(பி—ம்) மருவார் மடற்கமுகை.

வரையான் மகட்கரசு நடமாடு பொற்பொதுவின்
மணியார நச்ச ரவொடே
மதயானை யர்ச்சனைசெய் பதிமீது பெற்றதொரு
வளரா மவற்க மறைநூல்
அறையா யெனப்பரவு சிவன்மேவு கச்சியினில்
அறியா விளக்கி வையெலாம்
அடைவே படைத்ததமிழ் விரகா முருட்டுமுடை
யமணு சறுத்த களிறே
உறையா விருட்டுருவ விடமான திட்டமழு
லுறுநீறு வைத்து மெதிரே
யுயரானை விட்டுமிவை பணியாமல் மிக்கசிலை
யுறுதூணொ டொக்க விடுநாள்
திரையார் கடற்கரையி லினிதேற மப்பர்துணை
சிறுதே ருருட்டி யருளே
திருவான வட்டிநிறை திருஞான மெய்க்குழவி
சிறுதே ருருட்டி யருளே. 8

இவனே வெதுப்பகல விடுவா னெனச்சமண
ரிகழ்வே யுரைக்க வழுதா
வெழுகா விரித்துறைவன் மகளார்த மொக்கலையி
னினிதா வெடுக்க வரசாம்

அவனே மதிக்கவவன் முதுகூ னிமிர்த்துமவ
னருநோய் தவிர்த்து மடியோம்
அடியே துதிக்கும்வகை யருணீ றெமக்குதவு
மழகா வடைத்த செறுதாள்

தவனே திறக்கைபணி யெனவே மறைத்தலைவர்
தமைநா வினுக்க ரசனுர்
தமிழ்பா டிடக்கதவு தனையே முதற்பரவு
சதுரா லடைத்த படியே

சிவனே யடைத்தருள்செ யெனவோது கொச்சைமுனி
சிறுதே ருருட்டியருளே
திருவான வட்டிநிறை திருஞான சம்பந்த
சிறுதே ருருட்டி யருளே. 9

அலையார் புனற்கருகு பிறையாய் முடித்தபிறை
யருகே யெருக்க டவியாய்
அடரா வெருக்கினிடை யரவா யிருக்குமர
வருகே கடுக்கை மலராய்

இலையார் கடுக்கைமல ரருகே நகைத்தபல
தலையாய் விரித்த சடையாய்
இமவான் மடக்கொடிதன் மணவாள னைப்பரவு
மிசையா தமிழ்க்க ரசுநீர்

நிலையாய் நிலைக்கருகு மலராய் மலர்க்கருகு
ஞிமிறாய் ஞிமிற்ற ருகுமா
நிழலாய் நிழற்கருகு வளையாய் வளைக்கருகு
மணியாய் மணிக்க ருகுவெண்

சிலையாய் விளக்கமிகு பிரமா புரத்ததிப
சிறுதே ருருட்டி யருளே
திருவான் வட்டிநிறை திருஞான மெய்க்குழவி
சிறுதே ருருட்டியருளே. 10

---

பத்தாவது சிறுதேர்ப் பருவ முற்றிற்று.

---

திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் முற்றும்.

---

திருச்சிற்றம்பலம்.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ்

## குறிப்புரை முதலியன.

### காப்புப்பருவம்.

1. பிரமீசர்—இவர் பிரமதேவரால் பூசிக்கப் பெற்ற சிவபெருமான். கார்—மேகம். பொழில்—சோலை. கதிர்—கிரணம். கழுமலம் — சீகாழி. பெருவாழ்வை — பெரிய வாழ்வாகவுள்ளவரை. கவுணியன்—கவுணியகோத்திரத்திலே தோன்றியவர். கமலத்தார் — தாமரைப் பூமாலை: இஃது அந்தணர்க்குரியது. களிறு—யானை. பசுங்குதலை—இளமையான எழுத்து வடிவம் பெறாத சொல். மழவிடை—இளமையான இடபம். திருநிலை—திருநிலைநாயகி என்னும் திருப்பெயருடையஉமாதேவியார். திருத்தோணியிலிருந்து சென்று காட்சியளித்து நின்ற நிலை அது. திருநிலை பெருவாழ்வை, கவுணியனை, சைவசிகாமணியை, சம்பந்தப் பெருமானை, தமிழ்க்களிற்றைப்புரக்க எனக்கூட்டுக. பெருவாழ்வாவது வைதிக சைவ வாழ்க்கை பெற்று வாழ்வது.

2. இரவி — சூரியன். குரம் — குதிரையின் காற்குளம்பு. துரகத்திரளை — குதிரைகளின் தொகுதியை. அவை ஏழ்பரி. வழுதி — பாண்டியன். தீட்டி—எழுதி. அவர் — சமணர். எரி — நெருப்பு. தமிழ்ப் பனுவல் — தேவாரத்திருப்பதிகம். பரவை — கடல். அவர் இட்டவுரை — அத்திநாத்தி என்பது. “தளிரிள வளரொளி

......நள்ளாறர் நாமமே,........மிளிர் இள வளர் எரி யிடி லிவை பழுதிலை மெய்ம்மையே" என்னும் திருநள்ளாற்றுப் பதிகம். புற்போர்ப்பார்—சமணர். பழிமொழி—சமணர் சொல்லியவுரை. மயிலை-மயிலாப்பூர்: அஃது உமாதேவியார் மயில் வடிவமாகப் பூசித்த தலம். ஏறு—சிங்கம். தமிழ்க் குழவி—திருஞானசம்பந்தப் பிள்ளையார். நீற்றுக் காப்பு—திருநீறாகிய காப்பு. மடத்திலிடு கனல் வழுதிக்கு இடவும், அவரிட்டவுரை தோற்க மலரொத்து எழவும், பொய்க்க மெய்த்திடவும், சிரமுருளத் தொடவும், குடம் வடிவைத் தரவும், வேட்டைக் காட்டை அழித்திடவும் அரனைக் காட்டிக் காட்டி அழுத தமிழ்க்குழவி நெற்றியினில் திரு நீற்றுக் காப்பு வாய்க்கச் சேர்க்க எனக் கூட்டுக.

வேறு பல காப்புக்கள் உளவாக அவற்றைக் கூறாது திருநீற்றுக்காப்பையே கூறினார். இதனின்மிக்க காப்பு வேறொன்றுமின்மையான் என்க. வேதநெறி தழைத் தோங்க, மிகுசைவத்துறை விளங்க, பூதபரம்பரை பொலிய உலகத்தைப் பாதுகாக்கவரும்இப்பிள்ளையாருக்கு இறைவருடைய காப்பாகிய திருநீற்றுக் காப்பையே சேர்த் தனர். இதனை,

"ஆறுலவு செய்யசடை ஐயரரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரி யவர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார்"

என்னும் ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் திருவாக்கானுமுணர்க. திருநீற்றுக்கு 'இரக்ஷை' என்னும்பெயருண்மையுங்காண்க. மந்திரமாவது நீறு, வேதத்திலுள்ளது நீறு என்பன வாதிய திருநீற்றுப்பதிகவுண்மைகள் சிந்திக்கத் தக்கன, ஆளுடையபிள்ளையார் வாக்கு அவை ஆகலின்.

3. அலை ஆர் புனல் — அலைகள் பொருந்திய வைகை யாற்று நீர். கூடல்—நான்மாடக்கூடல். தொலையா நீதிச் சொக்கப்பெருமாள் என்றது என்றும் நீங்காத நீதியுடன் கூடியசோமசுந்தரபாண்டியரை. இறைவர் மதுரையை யாண்டமை குறிப்பித்தபடி. சொக்கு — பேரழகு.

4. இருள் உருவம் மால்—கரிய திருமேனியையுடைய திருமால். உததி—கடல். அயன்—பிரமதேவர். இசை—கீர்த்தி: இராகமும் ஆம். பல திசை—எட்டுத் திக்கு. கனகமால் வரை — பெரிய மேருமலை. மறுகு — தெரு. ஆண்டாருக்கு — சிவபிரானுக்கு. ஓட்டினில் — பிரமன் தலையோட்டில். ஊட்டவும், காட்டவும், ஓட்டவும், பார்க்கவும், காக்கவும், பார்க்கவும், குடிவாழ்க்கை வாழ்ந் தாளை எனக்கூட்டுக. சிவராகவனை—சிவபக்தி மிக்கவனை. ராகம் — விருப்பம். ஓடத்தாற் கரையணைந்தது திருக் கொள்ளம்பூதூரில். ஆண்தாலம் — ஆண்பனை. கமல கரம் — தாமரைக்கை.

5. படர் எரியின் அவர் இட்ட முட்டச்சொல் என்க. வேலை — கடல். எக்கர்—மணற்குன்று. தரளம்—முத்து. கொற்கைக் குலாதிபதி — பாண்டியன்: 'கொற்கையான் மாறன் குலசேகரன் வழுதி'' தனிப்பா. எய்ப்ப—இளைக்க. பதாதி — சேனை. வித்தகன் — சதுரப்பாட்டையுடைய வன். அத்தி — யானை. மட்டித்த — குழைந்த.

6. கடலினும் நான்கு மடங்கு கண்ணீர் வார என்க. மயிர் பறித்தலால் உண்டாகும் துன்பம் சகியாமல் கண் ணீர் பெருக. மாசுடைய உடல் — கழுவாத உடம்பு. மண்ணுமேனி என்பர் மணிமேகலையார். உலவு கழுது — திரிகின்ற பேய்க்கூட்டங்கள். கழுதைப் புரத்தலாவது தசையைப் பேய் உண்டு வாழும்படி செய்தல். மா அம ணர் — கரிய மேனியையுடைய சமணர்கள். துணையை—

துணைவனை. நீடு திறல் — மிக்க வன்மை. அரவு — ஆதிசேடன். அலக்கண் — துன்பம். மலையிசை உருவு பெற்றது ஒத்து — மலை மிகப் பெரிய வடிவங்கொண்டாற்போல. உகைத்து — செலுத்தி. சேவகன் துணையைப் புரக்க. துணை — துணைவன், சகோதரன்.

7. இழிந்த தேவர் — செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்: அவர் பிரமவிட்டுணுக்கள். தேவர்கட்கு இழிவு செத்துப் பிறத்தல் முதலியன. இதனை,

"நூறு கோடி பிரமர்க ளொழிந்தனர்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கைமண லெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே"

என்னும் அப்பர் தேவாரத்தாலறிக.

ஐயன் — தலைவன்; உயிர்த் தலைவன்: பசுபதியாகிய சிவபிரான். தரும விடையின்மேல் அருளொடுகூடித் தோன்றிய கடவுளைக் காட்டி. "அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக" என்பது திருக்களிற்றுப்படியார். நாண் மலர் — அன்றலர்ந்த பூ. பேதையார் — திருநிலைநாயகி. பொய்கை—பிரமதீர்த்தம்: இது அம்மையார் திருக்கோயில் முன்புள்ளது. பிரமதீர்த்தச்சிறப்பு பெரியபு: திருஞான: 58 — காண்க.

8. திருநெறி; திரு—சிவத்தன்மை. 'திருநெறிய தமிழ்' எனப் பிள்ளையார் அருளியமையுங்காண்க. கலியைநலிதலாவது உலகத்துத் துன்பத்தைப் போக்குதல்: வறுமையையும், பிறவித் துன்பத்தையும் கெடுத்தல். தேவர் தொழற்கு அரியான் — சிவபெருமான். பிரசம் — தேன். பரவை—கடல். பன்னிரு திருப்பெயர்ப்பழம்பதி—சீகாழி: தேவாரங்காண்க.

9. திசைமுகன்—பிரமதேவர். திகிரி—சக்கரப்படை 'ஆணை நமதே' என்ற கட்டளைத் திருப்பாட்டு. பால் நாறும் — பெரியநாயகியம்மையார் பொன்வள்ளத்திற் கரந்தளித்த திருமுலைப் பாலாகிய ஞானப்பாலின்மணம் மாறுமல் தோன்றும். திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் பதினுயிரம் என்ப. இது போது கிடைப்பன முன்னூற்றெண்பத்துநான்கு திருப் பதிகங்களேயாம்.

10. மகராலயம் — கடல். அடையார் — பகைவர். எயில்—மும்மதில். காதிய—அழித்த. தோணிச் சிகரத் திலே தெற்குநோக்கிய திருமுகத்துடன் இருப்பவர்சட்டை நாதர். இவர் வைரவக்கடவுள். ஆபத்துத்தாரணர் என்ற திருப்பெயரும் இவருக்குண்டு. இரணியன் உரங்கிழித்த நரசிங்கமூர்த்தியைக் கிழித்து அதன்தோலை மேற்போர்வை யாகக்கொண்டு விளங்குபவர் இம்மூர்த்தி. காணி—புரக்க, சிலையான் — வில்லையுடையவர்.

11. பரசமயகோளரியாய் ஒரு நெறிய மனம் வைத் துணர் ஞானசம்பந்தப் பிள்ளையாரைக் காக்கக் காப்புப் பருவத்திலே பண்டையோர் ஆசாரம்பற்றி, 1. திருமால், 2. சிவபெருமான், 3. உமாதேவியார், 4. விநாயகர், 5. முருகக்கடவுள், 6. பிரமதேவர், 7. தேவேந்திரன் 8. திருமகள், 9. கலைமகள், 10. சத்தமாதர்கள், 11. முப்பத்து முக்கோடிதேவர்காக்கஎன்றுகூறியமுறைமைகொள்ளாது திருமால், பிரமன், திக்குப்பாலகர் எண்மர், அருக்கர் பன் னிருவர், உருத்திரர் பதினொருவர், மருத்துவர் இருவர் கன்னியர் எழுவர் சேவித்து உடன்வருவர் என்று இவ் வாசிரியர் பிறிது விதி வகுக்கின்றார். சிவகுமாரனைச்சேவித் தலன்றிக் காக்குந்திறம் இவர்க்கின்மையின் என்க. சிவ குமாரன் என்றது புத்திரமார்க்கமுடைய பிள்ளையாரை.

—o—

## 2. செங்கீரைப் பருவம்.

இஃது ஒரு காலை முடக்கி, ஒரு காலை நீட்டி, இரு கரங்களையும் நிலத்தில் ஊன்றி, தலைநிமிர்த்தி, முகம் அசைத்து ஆடும் பருவம். "ஒருதாளுந்தியெழுந்திரு கையும் ஒருங்குபதித்து நிமிர்ந்—தருள்பொழி திருமுகமசைய வசைந்தினி தாடுக செங்கீரை" என்பர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்.

"இருகைமல ரும்புவி பதித்தொரு முழந்தா
 ளிருத்தியொரு தாண்மேனிமிர்த்
திந்த்ரதிரு விற்கிடை தொடுத்தவெண் டரளநிரை
 யேய்ப்பநுதல் வேர்பொடிப்பத்
திருமுக நிமிர்த்தொரு குளந்தையமு தாம்பிகை
 செங்கீரை யாடியருளே"

என்பது ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள் அருளிய அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ். இனி, செவ்விய சொற்களைச் சொல்லும் பருவம் என்பாரும் உளர். கீர்—சொல்.

1. (அடி—1) கோல்—செங்கோல். அகில வலயம்—எல்லாவுலகமும். கோமாறன்—பாண்டியவரசன். சமண் மூகர் — சமணரான ஊமர்கள்.

" திருமடத்தெரி யிட்டகுண்டர்
 கிடக்கவவ்வெரி தென்னனிற்
பெருமடத்தர சைச்சுடத்திரு
 வாய்மலர்ந்தது பிள்ளையே" என்பது
 தக்கயாக — 178.

"சைவர் வாழ்மடத் தமணர்க
 ளிட்டதீத் தழல்போய்ப்
பையவே சென்று பாண்டியற்
 காகெனப் பணித்தார்" என்பது — திருஞான:
 புரா: 704.

"செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐயனே யஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற் காகவே"

*என்பது முதலாகிய பதினொரு திருப்பாட்டுக்களும் ஆளுடைய பிள்ளையார் பணித்தருளியவை: பண்—கௌசிகம்.*

*(அடி - 2) மால் — மயக்கம். பாண்டியன் சுர நோயாற்படும் துன்பத்தால் வந்த மனமயக்கம். மதுர வாசக — விளி.*

*"மன்காதலி லுய்வதிவ் வையமெலா*
*மலையாண்முலை யாரமு துண்டவனே*
*என் காதல னெம்பெரு மானிவனுக்*
*கிதுவோதக வென்றன ளென்றலுமே"*

*தக்க: 186.*

*"மாமான்மர பிற்பகன் மண்டிலமொத்*
*தெரிமண்டின னென்னு மகீபதிநின்*
*கோமான்மர பிற்சசி மண்டிலநேர்*
*குளிரும்படி காணுதி கோமளமே"*

*என்பது தக்க 187.*

*இது மங்கையர்க்கரசியார் படுதுயர் கூறியபடி. இனி, பெண்பெருமாளுக்குப் பிள்ளையாரருளிய மதுரவாசகமாவது:*

"......எழில் கொள்பூம் புகலி வேந்தர்
ஒன்றுநீ ரஞ்ச வேண்டா வுணர்விலா அமணர் தம்மை
இன்றுநீர் உவகை யெய்த யாவருங் காண வாதில்
வென்றுமீ னவனை வெண்ணீ றணிவிப்பன்விதியாலென்றார்"

*என்பது திருஞான — புரா 734.*

2. ஒரு மலைச்சாபம் — ஒப்பற்ற மலைவில். உம்பர் நாயகன் — சிவபெருமான். கதிர்கள் — கிரணங்கள். சூரியர் அடைய — சூரியர் முழுவதும்: அவர் பன்னிருவர். உடன் இருந்து அனைய—ஒருசேர இருந்தாற்போல. பரு மணி—பெரிய இரத்தினம்; மாணிக்கக்கல்; அது செம்மணி. தரளப்பந்தர் — முத்துப்பந்தர். தடம் புனல் — திருப் பொய்கை; அது பிரம தீர்த்தம்.

3. களமர் — உழவர். கருமேதி — கரிய எருமை மலைவாய் — மலையினிடத்து. தளவு—முல்லை. மை உலா விய இதழ்க் குவளை — கருங்குவளை. விரகு — தந்திரம். களையொணுதென்றும், கவரொணுதென்றும், வேயொணு தென்றும், வெட்டொணுதென்றும் குவளையும் கொடி வள்ளையும் தளவும் குமிழும் மாளிகைதோறும் மலர் கின்றன எனக்கூட்டுக. தாமரையின்—தாமரையினிடத்து குவளை—கண். வள்ளை—காது. தளவு—பல். குமிழ்— மூக்கு. தாமரை — முகம்.

4. அகருவட்டக் கலசமுலை — அகிற்புகையூட்டிய வட்டமாகிய கலசம்போலும் முலை. சக்ரவாளச் சிகரவட் டம் — சக்கரவாளகிரியாகிய வட்டம் என்க. "அண்ட மனைத்துஞ் சூழவரும் பேராழி" தக்க: 595. "உடுத்த நேமிகிரி" தக்க: 422. 'சகத்தைச் சுற்றிய சக்கர வாள பருவதம்' 'இந்தச் சகதண்ட முழுவதுஞ்சூழ்ந்துகொண்ட சக்கரவாள பருவதம்'. தக்க: உரை. மகர வட்டப் பரவை — சுறுவென்னும் மீனம் உடைத்தான பூமியைச் சூழ்ந்த மகாசமுத்திரம். அரிவை—உமாதேவியார். அம் பரம் — ஆகாயம். பகழி — அம்பு. நச்சிவரு—விரும்பி வருகின்ற. முகடு — உச்சி. மஞ்சு — மேகம். தாழைப் பெருங்காடு — தென்னை மரங்கள் அடர்ந்த பெரிய காடு. தாழை — தென்னை.

5. கஞ்சாசனத்து அரிவை — தாமரைமலர்ப்பீடத்திலுள்ள திருமகள். தாமரைக் கண்ணன்—தாமரை மலர் போன்ற கண்களையுடைய திருமால். உதரக்கமலாசனத்தில்—உந்தித் தாமரையில். பிஞ்சாய வெண்மதி—இளம் பிறைச் சந்திரன். சடாடவி — சடைக்காடு. மா மலைப் பேதையொடு — மலைமகளோடு. ஆடல் வெம் புரவி — வெற்றி பொருந்திய விரும்பத் தகுந்த குதிரைகள். கதிர்க் கற்றை — கதிர்த்தொகுதி. உடு முகடு — நட்சத்திர மண்டலத்தின் உச்சி. செஞ்சாலி—செந்நெற்பயிர்கள்.

6. வளைய உகந்தான் — சிவபெருமான். ஊர்ந்தான் — அச்சிவபெருமானால் ஊர்ந்து செலுத்தப்பட்ட இடபமாகிய திருமால்: வினையாலணையும் பெயர். ஊர்ந்த ஆன் எனப்பிரிப்பினும் அமையும். வயிறது அது பகுதிப் பொருள் விகுதி. தழல் செல—அக்கினி அவிய. 'வயிறது காந்திய தழல்' எனவே பசித்தீ என்றபடி. ஊன்றிய மண் — திருவயிற்றிலடக்கி நிறுத்திய உலகம் என்க. பிரமப்பிரளயத்திலே உலகம் அழியாமல் அவ்வுலகைத் தமது திருவயிற்றிலடக்கிக்கொண்டு திருமால் யோக நித்திரை செய்தருளுவர் என்ற வரலாறு காண்க. மண் தான் உண்டாக—பூமி மீளவும் தோன்ற. உண்டாகவும், வந்தேறவும், கதிபெறவும் ஈந்தவன் என்க. அவன் மைந்தன் என்றது மகன்மை முறைபற்றி. உரிமையர் என்றது சிவனடியார்களை. நிசிசரர்—அரக்கர். பூம்பணை —அழகிய வயல். அணை—கரையிலிருந்து. குலாந்தக— குலத்துக்கு இயமனே. செரு—போர். என்று எழும்— எதிர்ந்து எழும். இப்பாடல் முதல் பத்தாம் பாடல் முடிய ஐந்து பாடல்களிலும் 'செருவினி லேன்றெழு' எனத் திருத்திக்கொள்க. ஆம் கனி விரவிய மாங்கனி — பொருந்திய கன்னியாராசியைக் கலந்துள்ள மா மரங்களிலுள்ள கனி என்க.

7. அயல் உரை தாங்கிய சிறுவன்—பிரகலாதன். கோள் துஞ்சாது — வலிமை கெடாமல் தூணங் கிறியவன் — இரணியன். அயலுரையாவது இரணியன் பெயரைக்கூறுமல் கட்டளை கடந்து நாராயண நாமங் கூறியது என்க. வயவலி—வென்றியின் வலிமை. கோபந் தீரவும், வயிற்றில் எரி தோன்றவும் வயிரவக்கடவுள் சரபவுருக்கொண்டு நரசிங்கத்தின் மண்டையைப் பிளந்தமை. விசைகொடுபோழ்ந்தவன் எனத்திருத்துக. இயல் — இயற்றமிழ் பாண்கிளைமிடையொலி — இசைப்பாட்டின் ஒலி: பாணரும் அவர் சுற்றமும் நெருங்கிப்பாடும் ஒலி என்க. வாங்கிய வெம்கோடு—வளைந்த வெவ்விய கொம்புகள், கோடு—பின்னது சங்குகள். தேன்—வண்டுகள். மூன்றழல்—முத்தீச்செல்வம்; ஆகவனியம், காருகபத்தியம், தட்சிணாக்கினி என்பன. இனவொலி செயலொலி என்று பாடமிருப்பின் நன்றெனத் தோன்றுகிறது. மூன்று அக்கினிகளையும் வளர்க்குங் காலத்து அவ்விடத்து நிகழும் லோபமில்லாத மந்திரோச்சாரண வொலி எனப் பொருள் கொள்க. 'குன்றுதசெயலொளி என்னும் பாடத்துக்குக் குறையாத செய்கை (கிரியை)களால் உண்டாகும் பிரகாசம் என்க தேஜஸ் என்றபடி: அது விளக்கமுறுதல்.

8. ஓங்கிய—உயர்ந்த. திருவோங்கல் — திருக்கயிலாய மலை. முனிவினில்—கோபத்தினல். எறிபடை—வாளாயுதம். நசை—விருப்பம். தங்கன்றை நினைந்து அன்பால் எருமைகள் பால் பொழியும் புகலி என்க.

9. இமகிரி ஈன்றவள் — பார்வதியம்மையார். விதி — தக்கன். வளையேந்தி—திருமால். பொருதபிரான் இங்கே வீரபத்திரக்கடவுள். சிவபிரானுடைய ஆணையின் வீரபத்திரக் கடவுள், வயிரவக் கடவுள் செய்யும் செயல்களெல்லாம் சிவபிரான் செய்ததாகவே கூறப்படும். அரியினம் — வண்டுக் கூட்டங்கள். குழல்—கூந்தல். காண்பவர் நெஞ்சு அவிழ்தல் — மனவலி கெடல்; இது காமுகர் செயல். அடைய — எல்லாம். 'நீர் சுவறுமடையவே, தக்க—499.

10. வருபகை-மேலும் மேலும் எதிர்ந்து வருகின்ற பகை. சங்கு ஆளும் பாணி—பாஞ்சசன்னியம் என்னும் சங்கைத் தமது திருக்கரத்தேந்திய திருமால். வடகிரி — மேருமலை. அலை—கடல். பணி — வாசுகி என்னும் பாம்பு. காளம்—நஞ்சு வந்தார்கள் — வந்தவர்களாகிய தேவர்கள்: வினைப் பெயர்.

## 3. தாலப்பருவம்.

தாலப்பருவம் மூன்றுவது. தாலாட்டென்பது தால் என மருவி வழங்கியது. தால்—நா. மடித்தலத்தும் மணித் தவிசினும் தொட்டிலினுங் கிடத்தித் தாயர் தம் நாவை அசைத்துப் பாடும் பகுதியைக் கூறும் பருவம். எட்டாம் மாதத்தில் இஃது இயம்பப்படும் என்பர்.

1. கமலப் பூ—தாமரை மலர். மேதித்திரள்—எருமைக் கூட்டம். வன்கரை—வலியகரை. வண்கரை என்ற பாடத்துக்கு வளப்பம் பொருந்திய கரை என்க. தோழம்—தொழுவம். எண்ணாயிரம் சமணர்களாகிய பசுக்கள் கூடிய தொழுவத்தின் இடையே சென்ற புலியை யொப்பவரே. "மான் குழாம் நடுவட் போந்த வல்லுகிர்த் தரக்குப் போன்றான்" என்பதுபோல. சமணப் பசுக்கள் எண்ணாயிரமும் ஒருசேரத் திடுக்கிட்டு அஞ்ச என்றபடி,

2. விண்தாவ-ஆகாயத்திலேதாவும்படி. மிதவை-புணை. புண்டரிகத் தண் தாமம்—தாமரை மலர் மாலை; இஃது அந்தணர்க் குரித்து

3. கற்பகம் என்றூர் வரையாது கொடுத்தலின், திருவுக்கும்படி—திருமகளும் சாம்பும்படி; திருவுக்கும் படி ஒக்க—இலக்குமி தேவிக்கும் படிவத்தால் ஒக்கும்படி. சித்ரப்பிடி—அழகிய பெண் யானையை யொத்த பூம்பாவை: மயிலாப்பூர்

நிகழ்ச்சி காண்க. புற்படம்—மரவுரி. அமணே உலவக் கற்று என்றது சமண சமயமே உலகில் பரவும்படி செய்துஎன்றபடி. முட்ட—சந்திக்க அமணே எனத் திருத்துக.

4. திகிரிக்கோன் — சக்கராயுதத்தையுடைய திருமால். மாறன்—பாண்டியன்.

5. அமிழ்து ஆரும்படி. ஆர்தல்—உண்ணுதல். அலை நீர்—கடல்; திருப்பாற்கடல் என்றபடி. அடல் நாகம்—வலிய பாம்பு; வாசுகி. பகுவாய் — பிளந்தவாய் ஆலாலம் — ஆலகால நஞ்சு. குமிழ் ஆரம்—குமிழ மரங்களையும் சந்தன மரங்களையும். குணபாகம்—கீழ்பாகம், குடபாகம் — மேல் பாகம். தமிழ்—தேவாரத் திருப்பதிகம்.

6. சத இதழ் — நூறு இதழ்களையுடைய தாமரை. மூகடு—பீடம். தரம் இலி — பெருமையில்லாத. தரம் — சிறப்பு. மகிதலம்—பூமி. புத்த நந்தி தலைவிழச் செய்தது. அடைவு—முறைமை. விருது—விருதாவளி; மெய்க்கீர்த்தி. வழை அடவி—சுரபுன்னைக்காடு. கதம்—கோபம் களிறு —கெளிறு என்னும் மீன்: ஆண்சுறு. "கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே" பிங்கலந்தை "மகரக்களிக்களிறு" தக்க; 456. ,,மடையை முட்டுவன கரை நெருக்குவன மழுவு ருக்குவன மாநீர்போய் — வயல்க லக்குவன கதிர்வ ணக்குவன வளைது ரத்துவன தேனேகும், — தொடையை யெற்றுவன வளியெ ழுப்புவன சுவைவி ழுத்துவன வானூடே—சுடர் வெருட்டுவன வெழிலி தத்துவன துளியி றக்குவன கீழ்கால்வா,—யிடையை யெட்டுவன கமுக லக்கு வன வெருமை மொத்துவன சேலேபாய்..." என்னும் சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்ப் பகுதி இங்கு ஒப்பிடத்தக்கது. ஏரார் சேல் எனத் திருத்துக. ஏர் — அழகு. ஆர் — மிக்க.

7. படைவணிகன் — கண்படை செய்த வாணிகன். பணி—பாம்பு. எயிறு—பல். உகுக்க—சிந்த. தெரிவை— செட்டிப்பெண். பதுமவிழி — தாமரை மலர்போன்ற கண். இழிய அருளி—ஒழுகுமாறு கருணைசெய்து. முகிழ்த்த மதியென

—நிலவைச் செய்கின்ற சந்திரன் போல குவித்தர—குவிக்க. இன் வரி வளை—இனிய சுரிமுகச் சங்குகள் 'பலவு எடுத்த கனி—பலாக்கனி. உக்க புனல்—பழச்சாறு. கடைசியர்—உழத்தியர்.

8. அருகமுது விட்டவர்கள் எனவும், தேனீர் மேய் எனவும். கருகிய திரைப்பரவை எனவும் திருத்துக. குருகு—நீர்வாழ் பறவைகள். வானகம்—ஆகாயம். வெருவ—அஞ்ச. உரகர்—பாம்புகள். பழனம்—வயல். தேமா கனியை நிரப்புவன, தேன் மதுவைக் கட்டுவன, நீர் நாவாய் மடுவினை யுழக்குவன, கலப்பை வழிபுதுக்குவன, முத்து அணைகட்டுவன என்க.

9, வனப்பு—அழகு. மீகாமன்—மாலுமி. கடலடைத்தவன்—சிராமாவதாரத்திலே சேதுபந்தனம் செய்த திருமால் மதிப்பரிய மணி — சிவபிரான். அதிர்கலி — வெற்றுரை மிக்கொலித்தலையுடைய. புறச்சமயங்களாகிய முதுமையான களைகள். அறுசமயம் என்றது அகச்சமயம் ஆறினையும். காளை—வேடன். தறுகண்—அஞ்சாமை உரக பண பத்தி — ஆதிசேடனுடைய ஆயிரந்தலைகளின் வரிசை. வெயில் — கிரணம். வாமம் — அழகு. எட்டுமடி — எட்டுமடங்கு.

10. தோலாமே—தோல்வியடையாமல். கரையொடுக்கி எனத் திருத்துக உட்கும் — அஞ்சும் பச்சை வயமா — பச்சை நிறமுடைய வெற்றி பொருந்திய சூரியனுடைய தேர்க் குதிரைகள்: அவை ஏழ்பரி.

" நிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
வொருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவு ளேறினன்"

என்பது சிலப்பதிகாரம்.

---

## 4. சப்பாணிப் பருவம்.

சப்பாணிப் பருவம் என்பது கையோடு கைசேர்த்துக் கொட்டும் பருவம் எனப் பொருள்படும். கையோடு கையைச் சேர்த்துக் கொட்டிக்காட்டி அக்குழந்தையிடம் சப்பாணி கொட்டும்படி கூறுவதாக அமைக்கப்பெறுவது இப்பருவம். ஸ:பாணி — சப்பாணி. ஸ: — கூட. இஃது ஒன்பதாம் மாதத்தில் கூறப்படுவதென்பர்.

1. சண்பகாடவி – சண்பகவனம். ஞானத்தமிழ் – சிவஞானத்தை விளைவிக்கும் தேவாரத்திருப்பாட்டு: வங்கம் — மரக்கலம். எண்திசாமுகம் — எட்டுத்திக்குகள். இமயமங்கை — உமாதேவியார். அடுபடை — கொல்லும் படைக்கலங்களையுடைய. கூளிநாயகன் — பேய்க்கணங்கட்குத்தலைவர். 'பேயோடாடி' என்பது இறைவற்கொருபெயர். மறுவிலோர் — குற்றமில்லாத அடியார்கள். மறைவலோர் என்ற பாடத்துக்கு அந்தணர் என்க. சண்பை—சீர்காழி. தல முழுதும் அர ஒலி வளர அமுதமுனி — சம்பந்தமூர்த்திசுவாமிகள் 'எண்ணின் மறையொலிபெருக எவ்வுயிருங் குதூகலிப்பப், புண்ணியக் கன்றனையவர் தாம் பொருமியழுதருளினர்' எனவும், 'வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப் — பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத — சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்' எனவும் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்தமை காண்க. ஞானசம்பந்தரை முனியென்றது " பிரமாபுரத்து மறைஞான ஞானமுனிவன் " என்பது கருதி என்க. ஆளுடையபிள்ளையாரையன்றி வாகீசரும் முனிவர் என வழங்கப்படுதல் "திருநாவுக்கரசுவளர் திருத்தொண்டுநெறிவாழ — வருஞானத்தவமுனிவர்" என்னும் திருவாக்குண்மை நோக்கியறிக. "திருவாதவூர்மகிழ் செழுமறைமுனிவர்" எனப்

பேராசிரியரும் முற்றத்துறந்து முழுதுணர்ந்த அந்தணர் சிகாமணியாகிய வாதவூரடிகளை எடுத்தோதினமை காண்க. 'முனிமொழியுங் கோவை திருவாசகம்'—வாதவூர் முனிவராகிய சமயாசாரியர் அருளிச்செய்த திருக்கோவை திருவாசக வோத்துக்கள் என்க. திருக்கோவையார், திருவாசகத்துள் ஒரு பகுதியே என்பதுகருதிக் கோவைத் திருவாசகம் எனவும் ஆன்றோர் கூறுவர்.

2. துங்கம் — பரிசுத்தம். களமர் — உழவர். புரிசை சூழும் அகழில்—மதிலைச் சூழ்ந்துள்ள அகழியில். புல்லும்—பொருந்தும். பூகம்—பாக்குமரம். பொருகடல்—கரையை மோதுகின்ற அலைகளையுடைய சமுத்திரம். எல்லாவிடங்களிலும் இப்பிமுத்துக்கள் நிறைந்து விளங்கும் சண்பை நகர் என்க.

3. அருவி முக்கடம் — அருவியாகிய மும்மதம். அலகை — பேய். அறுபதம் — வண்டுகள்; ஆறுகால்களையுடையது எனக்காரணக்குறி. வடமொழியில் 'ஷட்பதம்' என்றமையும் காண்க. 'அறுபதத்துறவுடைய' தெனவும், 'உலகொடுக்கிய வடியது' எனவும் திருத்துக. உடு—நட்சத்திரம். ஒன்னார் — பகைவர். கடமுடையது, படையது, உறவுடையது, அடவருவது, பொருவது, உருவது, கடியது, அடியது, முடியது, விழியது ஆகிய யானை என்க. இது தாருகவன முனிவர் ஏவிய யானை. கமுகு—பாக்கு. கதலிகை — வாழை. வகுளம் — மகிழமரம். அகரு — அகில். கொச்சை — கொச்சை வயம் என்பது சீர்காழிக்கு ஒரு பெயர்.

4. இது சமணர் இயல்பு கூறியது. அமணர் கழுமேற்கொள என்றதுவாதிலேதோற்ற அவர் மனம்பொருராய்த் தாமே தமது சொல் தவருது கழுவிலேறினர் என்றது. "பிள்ளையார் கொன்ருராகச் சொல்லியது படைசெய்த

பராக்கிரமம் இராசாக்களதாம் எனவே யுணர்க" என்னும் தக்க — 220: உரை நோக்கியறிக. இனி, "வேதப் பகைவர் தம்முடம்பு வீங்கத் தூங்கும் வெங் கழுவிற், கேதப் படுமெண் பெருங்குன்றத் தெல்லா வசோகு மெறிகெனவே" எனப் பாண்டிய குலபதி அருளிச்செய்வானாயினான். "இராசாவை நோக்கி ஈது ஆகா தென்று பிள்ளையார் விலக்கியருள" என்ற வாக்கியம் ஆளுடைய பிள்ளையாருடைய பெருங்கருணைத்திறத்தை நன்கு புலப்படுத்துகின்றமை பரணியிற் காண்க. மழை தோய்கா எனத் திருத்துக. மழை-மேகம். மதுகரம்-வண்டு. காமரம்—ஒருபண். களிறு, முனி என்பன விளி. மதுகரம் பாட, மயில் ஆட, செந்நெல் வீச, அன்னம் ஏறும் என்க.

5. பணமகுடம் — படத்தின் உச்சி. மாசுணம் — பாம்பு. கனகமலை — பொன்மலை. கமலமகள் — திரு. கமலமகன் — பிரமன். தலைமகன் — சிவபெருமான்.

6. செஞ்சுடர் இரவி — சிவந்த கிரணங்களையுடைய சூரியன். "உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர் புகழ் ஞாயிறு" மேருமலையை வலமாக வருதலும், மேருமலையில் கயற்கொடி பொறித்தலும் கூறியது காண்க. உடல் வளைந்தது நிமிர — கூன் நிமிர என்றபடி.

"ஒருகூன்மிசை வைத்த திருக்கைபுறத்
தொருகூன்மிசை வைத்தனர் வைத்தலுமே
இருகூனு நிமிர்ந்தன தென்னவர்கோன்
முதுகுந்தட மார்பு மிடம்பெறவே" தக்க—216.

"முன்னும் பின்னும் ஒக்க நிமிர்ந்தவாறே தடமார்பும் அழகிய முதுகும் ஆயின........" என்பது அதனுரை. இனி, "வண்புகலி, வேந்தரால் ஆருயிர்க்கூன் மெய்க்கூன் தவிர்ந்தருளே, சேர்ந்துவாழ் நின்றசீர்த் தென்னவனும்"

என்பது சொக்கநாதருலா. வடவிலங்கல் — வடக்கின் கண் உள்ள இமயமலை. உழுவை — புலி. தோளினன் — சோழன். ஒக்கலை — சுற்றம். மிசையை எட்டிய — மேலுலகத்தைத் தாவுகின்ற. தலைப்பூகம் — உச்சியையுடைய பாக்கு மரங்கள். சிவன் விசும்புக் கியைய எனத் திருத்துக. பூகம், ஏணியோ? கால்களோ? எனவிலவு என்க.

7. கலி — துன்பம். மிடி — தரித்திரம். கொட்டாரம்—சரக்கறை. நெடியவன் சமண் இவுளி—பெரிய வலிய சமணர்களாகிய குதிரைகள். பட உரறி எனத் திருத்துக. உரறி — முழங்கி.

"வெண்ணந்துரறி வயிறுளைந்து"
சேக்கி - பிள்ளை - தாலப் - 1.

"உருமுரறு கருவிய மழைபொழிந்தாங்கே"
புறநா - 174.

பயிரை விளைவித்து என்றிருந்தால் பொருள் சிறக்கும் எனத் தோற்றுகிறது. ஆராய்ந்து கொள்க.

8. சரணபங்கயம் — பாத தாமரை. அற்புத — ஞானத்தின் திருவுருவானவனே.

9. இஃது அற்புதச்செயல்களைக் கூறியபடி.

10. திருப்பதிக்ம்பெற்ற திருத்தலங்களின் பெயர்கள் அடைமொழியின்றி இப்பாட்லில் வந்தன காண்க.

---

## 5. முத்தப்பருவம்.

---

தாயரும் பிறரும் 'முத்தம் தா' எனக் குழந்தையை வேண்டுவதாகக் கூறுதல் இப்பருவத்தின் செய்தி. முத்தம்

என்பது முத்தையும் குறிப்பது ஆகலின் பல்வகை முத்தங்களினும் நின்னுடைய வாய்முத்தமே சிறந்தது என்பது மரபு. இது பன்னிரண்டாம் மாதத்தில் கூறப்படும் என்பர்.

1. சுடிகை — உச்சி. பணமகுடம் — படமாகிய முடி. வாள் — ஒளி. அங்காப்ப — வாய்திறக்க. கனகக்கிரி—மேருமலை. பரவை — கடல், என்றது பாற்கடலை. மண்ணுண்டவன் — திருமால்.

2. கழை முத்து — கரும்பின் முத்து; மூங்கில் முத்து எனினுமாம். மாநீர் எனத்திருத்துக. அதுபெருமை பொருந்திய நீர் என்க. அரசின் வடகரை — அரிசிலாற்றின் வடகரையில். விண்ணிழி விமானம் என்க. மிழலை — திருவீழிமிழலை. இசை ஆகரன் — புகழுக்கு இருப்பிடமானவன். மிசைதாவி எனத் திருத்துக. தரங்கம்—அலை. திருவீழிமிழலையிலே ஒருபஞ்சகாலத்தில் படிக்காசுபெற்ற வரலாறு பெரியபுராணத்துக்காண்க.

3. இணர் — பூங்கொத்து. தெய்வத்தமிழின் கொழுந்து, நான்மறையின் கிழங்கு. பரி — குதிரை; விலங்கு என்றபடி. வாரணம் — யானை. குமுதம் — அல்லி. தொண்டை — ஆதொண்டை. பீடு — பெருமை. முருக்கு — முள்ளுமுருக்கு.

4. நாண்மலர் — அன்றலர்ந்த பூ. குஞ்சி — ஆண் மயிர். வேடன்—கண்ணப்பநாயனார். தேவாரம் காண்க. யானைக்கொம்பினின்று எடுக்கும் முத்து, சங்குமுத்து, மூங்கில்முத்து, நெல்முத்து முதலியன. கன்னல்—கரும்பு. முத்துப் பிறக்கும்இடங்கள் இருபது; எட்டு என்றும் கூறுவர்.

5. நாமப்புலி — அச்சத்தை விளைக்கும் புலி. வழுதி — பாண்டியன். மந்திரம் — ஆலோசனை. குலச்சிறை — குலங்காப்பவர்; பெருநம்பிகுலோற்பவர். என்னும்

எண்ணம் — மதுரை மாநகர் முழுவதும் சைவசமயம் பரவவேண்டும், அரசனும் சைவனாதல் வேண்டும் என்றெண்ணிய எண்ணம் என்க.

6. கணவர்—'கணத்தில் தோன்றியழியும்' என்னும் கொள்கையுடையார். அது க்ஷணபவபங்கம் என்க.

7. தளரவே எனத்திருத்துக. கண்ணீர் ஒழுகும்படி தலைமயிரைப்பறிக்கும் அமணர் என்றபடி.

8. திருவுருக்கொண்டவன் — திருமால். துவலை — நீர்த்திவலை; கங்கை.

9. கமலவட்டம் — உளத்தாமரை. பிரசம்—தேன்.

## 6. வாரானைப்பருவம்.

தளர் நடையிட்டு வரும் குழவியை வா என அழைப்பதாக இப்பருவத்தில் சிறப்பித்துக்கூறப்படும். இது பன்னிரண்டாம் மாதத்திலே சொல்லப்படும் என்பர்.

1. தென்திக்கு இலங்கும் மலை — பொதியில். மலைத்தமிழ் — செந்தமிழ்ப் பரமாசாரியராகிய முருகவேள்பால் தமிழை உணர்ந்த அகத்தியமுனிவர் நிலத்துத்தமிழைப் பரப்பிப் பொதியில்மலையில் வீற்றிருத்தலின் அங்கிருந்து தோன்றிய தமிழ் என்பது வழக்கு. செவ்வித்தேன் — இலக்கணவரம்புடன்கூடி இனிமைபயத்தலின்; பருவம் முதிர்ந்த செந்தேன் என்றார். உழக்கி — கலக்கி. பகலின் போது — பகற்காலம். மகரக்கொடிவேள் — மன்மதன். திங்கட்கவிகை—திங்கட்குடை. பெரும்போது — மலரும் பருவத்தரும்பு. மன்றில் — ஊர்க்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தடியில்.

பசுந்தென்றல் (மலையத்திலே தோன்றி) தேன் முகந்து, நீராடி, ஒன்றி, அலர்த்தி, உழக்கி, உலாவி, வீசி, மன்றில் புகுந்து விளையாடும் புகலி என்க.

2. மகராலயம் போன்று விளங்கும் புகலி. மகராலயம் — கடல். கடலில் தோணி, சங்கு, சுறவம், இரத்தினம், நித்திலம், அமுதம், நஞ்சு, அரமகளிர் முதலிய தோன்றுவன. புகலி தெய்வத்தோணியால், சங்க வாத்தியங்களால், மகரக்கொடியால், மணிகள் முத்துக்கள் கிரணத்தைச் செய்தலால், கனிவாயமுதுடன் விழிநஞ்சும் தோன்ற நல்லார் தோன்றலால் கடலை ஒத்து விளங்கும். சிகரம்—மலையுச்சி. அசலம்—மலை. சிலையாளி — வில்லையுடைய சிவபிரான். புகர் — குற்றம். பகழிப்பூ — அம்பாகிய மலர். துவசம் — கொடி. பூண்—ஆபரணம். துகிர்—பவளம். கனிவாய், வேல்விழி உவமைத்தொகை.

3. சடங்கு — விதி. அயன் — பிரமன். சக்ராயுதன் — விஷ்ணுமூர்த்தி. இந்த்ராதியர்கள் எனத்திருத்துக. பச்சைப்பிடி — உமாதேவியார். தாவடி — போர்.

4. கமுகின் மிடறு — பாக்குமரத்தின் கழுத்து. கதலிக்குலை — வாழைக்குலை. சிதற எனத்திருத்துக. மறித்தும்—மீட்டும். பங்கேருகம்—தாமரை. சதகோடி — நூறுகோடி; என்பது மிகுதிபற்றி. தாவி பாய்ந்து புகுந்து துகைத்து உழக்கி எழுப்பி தள்ளி கறுவி அடர்த்து வாளைக்களிறு விளையாடும் என்க.

5. திருவரத்துறை பட்டீச்சுரத்துக்கு அண்மையில் உள்ளது.

6. இது களமர் செயல் கூறியபடி.

7. முருகு — வாசனை, தேன். முளரி — தாமரை. தெரியல் — மாலை. அளகம் — கூந்தல். தரளவடம் — முத்துமாலை. மறுகு — வீதி.

8. துழனி — ஒலி. அலகையின முழீர் எனத் திருத்துக. தமருகம் — உடுக்கை. தவளவிடை — வெள்ளிய இடபம்.

9. இறைவர் உரை—சிவாகமம். பிடகன்—புத்தன்.

10. வெறி — வாசனை. நயனம் — கண்கள். மகிழ்நர் — கணவர். அமளி — படுக்கை.

11. இடவகையின் கடைசெல எனத் திருத்துக.

---

## 7. அம்புலிப்பருவம்.

---

அம்புலிப்பருவம் என்பது குழந்தையுடன் விளையாட வருக எனச்செவிலியர் அம்புலியை அழைப்பதாகக் கூறப்படுவது. இது பதினெட்டாம் மாதத்திலே கூறப்படும் என்பர். சாம - பேத - தான - தண்டம் ஆகிய நால்வகை உபாயங்களாலும் சந்திரனை இப்பருவத்தில் அழைக்கப் பெறும். இப்பருவம் பாடுதல் புலவர்கட்கு எளிதன்று: ஆகலின், 'அம்புலி புலி' என்பர் ஆன்றோர்.

1. பீலி - மயில் தோகைகள். சுறுநாறுதல் - பாண்டியன் உடலில் உள்ள வெப்புநோய் தீர வலப்பால் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் இடப்பால் சமணர்களும் தங்கள் தங்கள் திருக்கரத்தாலும் மயிற்பீலியாலும் முறையே தடவினர்களாக; வலப்பால் பொய்கையிற் குளிர்ந்தது: இடப்பால் மிக்க அழல்மண்டி எழுந்தது: பீலிகள் தீயச் சுறுநாறிற்றென்க. இதனை, சேக்கிழார் சுவாமிகள் —

" உறியுடைக் கையர் பாயி னுடுக்கையர் நடுக்க மெய்திச், செறிமயிற் பீலி தீயத் தென்னன் வெப்புறுதீத்

தம்மை, எறியமா சுடலுங் கன்றி அருகுவிட் டேறகிற் பார், அறிவுடையாரை யொத்தார் அறிவிலா நெறியி னின்றார்" என்றருளினார்கள்.

" நீர்வந்து தொடத்தொட வெந்துருகா
நெடுவேனில் சுடச்சுட நின்றுலறிக்
கார்வந்து தொடத்தொட வுய்ந்திளகும்
காடொத்தனென் யானிவர் கைப்படவே."

எனப் பாண்டியன் சொன்னான் எனத் தக்கயாகப் பரணியில் கலாவல்லிகூற்றில்வைத்துக் கவிராக்ஷஸர் கூறியமையுங்காண்க. கலக்கம் பாண்டியன்மேற்று. கலக்கமும் கூனும் உடன் தீர்த்து என்றபடி. கூனும் இறுதி தொக்கது. கூன் தீர்த்தபடி முன்னேகாண்க. நின் குலத்தரசன் என்றது பாண்டியனை; அவன் சந்திரகுலத் தவன் ஆகலின்.

மதியிலாய் என்றது சந்திரனை. மதியோன் என நின்னை உலகோர் கூறுவர். மதியுடையையாயின் வாழ்வு தந்தவன் என்பதை உணர்வாயன்றோ? உணராமையின் 'மதியிலாய்' என நின்னை இகழ்ந்து கூறியபடி. சீவரம் — மருதந்துவராடை.

பவுத்தன் தலை வீழப்பார்த்தது திருப்போதிமங்கை யில். அம்மே! அப்பா!! எனப் பொய்கைக்கரையில் நின் றழுதருளியது உலகத்தோர் அழுகைதீர: அவ் அழுகையே உலகத்தாருக்கு வைதிக சைவ வாழ்வுதந்தருளியது என்க.

2. பணி — பாம்பு. எயிறு — பல். திரை — அலை களையுடைய பாற்கடல்: ஆகுபெயர். உன்னுடைய கோள் மொழியால் என்க. ஆகம் — உடல். நாகங்கள் இராகு கேதுக்கள். மருகல் வரலாறு பெரிய புராணத்துக்காண்க.

3. ஓடத்தை வருகென்றது — "கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்" என்னும் முதற் குறிப்புடைய பாடற்றிருப்பதிகம் பாடிக் கரைசேர்ந்தது திருக்கொள்ளம் பூதூரில். "காவலனு ரோடத்தின் கட்டவிழ்த்துக் கண்ணுதலான் திருத்தொண்டர் தம்மை யேற்றி, நாவலமே கோலாக அதன்மேனின்று நம்பர்தமைக் கொட்டமே நவின்று பாட"... சார்ந்தார் என்க. ஆண்பனை பெண்பனையாக்கியருளியது திருவோத்தூரில். பழி — குருபத்தினியைப் புணர்ந்தது முதலியன. திருவிசை கோத்தவன் எனத்திருத்துக.

4. மயிலை — மயிலாப்பூர். தத்தை — பூம்பாவை.

5. தேவர்கள் மணவாளன்—தேவர்கட்குத்தலைவன். சடையினையுடைய மணவாளன் என்க. "செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள" என்றார் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள். "தோன்றி மரிக்கும் தெய்வங்கண் மணாளன்" என்பது திருப்பூவணநாதருலா. 'அறுபத்துநாலு வண்கலை நிரப்பியமுனி' என்றது "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்" என்ற பெரிய புராணத் திருவிருத்தத்தை நினைப்பிக்கின்றது. அம்மையார் இறைவரைப் போலவே ஞானவடிவினர், அவருடைய இரண்டு தனங்களும் பரஞானம் அபரஞானம் எனப்படுவன; அதிற் பெருகிய பாலும் ஞானமயமே என்க. "சத்திதன் வடிவேதென்னிற் றடையிலா ஞான மாகும்" என்பது சிவஞான சித்தியார், நரந்த நாண் மலர் எனத்திருத்துக.

6. இதில் திருத்தோணிபுரம் என்றதன் வரலாறு கூறப்பட்டது.

7. பிரசம் — தேன். வெங்குரு — சீகாழிக்கொரு பெயர்; தேவகுருவாகிய பிரகஸ்பதி தம்மை யொழிந்து கர்த்தா வேறுண்டோ என்று அகந்தைகொண்டார். சிவபெருமான் அவருடைய கர்வத்தை யடக்கக்கருதித் தேவ

குருவாம் அதிகாரத்தை மாற்றியருளினார். அதனை யுணர்ந்த வியாழபகவான் இப்பதியை அடைந்து இறைவரைப் பணிந்து தான்செய்த குற்றங்களைப் போக்கியருளுக எனக்குறையிரந்துநின்றார். அவ்வேண்டுகோளுக்கு இரங்கிய சிவபெருமான் முன்போலவே அவருக்கு அவ்வதிகாரத்தைக் கொடுத்தருளினார் என்பது வரலாறு. இதனைத் திருவெழுகூற்றிருக்கைத் திருவுட்கிடையில் கண்ணுடையவள்ளல் கூறியுள்ளமை காண்க, மற்றும், "ஐம்புலன்களை வென்று பரிபக்குவமுற்ற மெய்த்தொண்டர்களுக்குச் சிவபெருமான் குருவாகத்தோன்றி இத்தலத்தில் அருள்புரிவதால் அப்பெயராயிற்று" என்னும் கருத்துப்பட திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமது தேவாரம் "அங்கமதி" என்று தொடங்கும் திருப்பாட்டிலே "......புலன்கள் களைவோர், வெங்குரு விளங்கி யுமைபங்கர் சரணங்கள் பணி வெங்குருவதே" என அருளியமை கருதத்தக்கது.

8. விரிஞ்சன் — பிரமதேவர். கஞ்சனை வினைசெய் வஞ்சன் என்றது கண்ணபிரான் அவதாரமாகிய விஷ்ணு மூர்த்தியை. களிறுடையவன் — இந்திரன்.

9. முனி— தக்ஷமுனிவன். குலஅரசு—பாண்டியன்.

---

## 8. சிற்றிற்பருவம்.

---

சிற்றிற் பருவத்திலே சிறுவீடு கட்டி விளையாடும் சிறுமியர் தம் சிற்றிலைப் பாட்டுடைத்தலைவர் அழிக்கும் போது 'எங்கள் சிற்றிலை அழியாதொழிக' என வேண்டுவதாகக் கூறப்படும். இஃது இரண்டாம் ஆண்டிற் கூறப்படுவது என்பர். சிறுமிகள் மணல்வீடுகட்டி விளையாடுவதையும் சிறார்கள் அதனைத் தமது காலால்சிதைத்து அவர்களை அழப்பண்ணித் தாம் மகிழ்தலும் உலக இயல்பு.

1. சூல் — கரு. நீலமலர்க்கழி—நீலோற்பலமலர்கள் மலரும் உப்பங்கழிகள். முலை சுரந்த மொழியால் — உமா தேவியார் பொன் வள்ளத்திலே பெய்து கொடுத்தருளிய சிவஞானப்பால் மொழியால்: சிவபிரானை அவனருளா லன்றிப் பெறப்படாது என்பதும், சிவஞானத்தாலேயே காணப்படுவர் அவர் என்பதும் குறிப்பித்தபடி. "அருளது சத்தியாகும்" எனவும், "சத்திதன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்" எனவும் வரும் திருவாக்குக் களால் உணர்க. இதனை, "......வன் கேழலின் பின்பு சென்ற, வேட்டுவர் கோலத்து வேதத் தலைவனை மெல் விரலால், தோட்டியல் காதன் இவன் என்று தாதைக்குச் சூழ்விசும்பிற், காட்டிய கன்"று என்னும் ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியும் உணர்த்தும். உலகம் எல்லாம் அழியாவகை ஆட்கொண்டது — வேதநிந்தனை, சைவ நிந்தனை, அடியார் நிந்தனை முதலிய நிந்தை கூறி எரிவாய் நிரயத்துக்கு ஆளாகாமல் உலகரைச் சிவபெருமான் திருவருள் பெற்றுய்யச் செய்தருளியது. உலக முழுவதை யும் அழியாமல் ஆட்கொண்டருளிய நீர் உமது திருவடி களைக்கொண்டு அடியேங்களுடைய சிற்றிலை அழிக்காதீர் என வேண்டிக்கொண்டபடி.

2. சுழிக்கும் — சுழித்தலைச்செய்யும். பெருஞ்சாறு — மிக்கசாறு. பரசமயப்பகடு — பரசமயங்களாகிய மதயானைகள்: இதனை, 'பரசமயகோளரி' என்னும் பெயருண்மையில் வைத்துக் காண்க. பரசமயங்களைப் பகடாக உருவகம் பண்ணிப் புகலிப் பெருமானைக் கோளரி யாக உருவகம் பண்ணாமையால் இஃது ஏகதேசஉருவகம். பகட்டைப் பால்வாய்ப் பசுந்தமிழால் அழிக்கும் திற முடையீர்! நீர் எங்கள் சிறு வீட்டைப் பாததாமரையால் அழியாதீர் என வேண்டியபடி இது என்க.

3. சமணர் நின்று உண்பவர் என்பது இதிற் குறிப்பித்தபடி. தமிழ் பாடும் — தேவாரத்திருப்பதிகத்தை அருளிச்செய்யும். ஏற்றின் கொடி—இடபக்கொடி. தான் அசை. பங்குடையாள் — பாதியிலுள்ள உமாதேவியார். சிறுமியர், தாம் கட்டிவிளையாடும் சிறுவீட்டைத் திருவடித் தாமரையால் நீர் அழிப்பீராயின் முத்துக்கள் உமது காலில் உறுத்தும் எனக்கூறி அவரைத் தடுக்கின்றனர்.

4. தள்ளாடாவகை பேதித்து — பிறப்புஇறப்புக் களில்பட்டுத் தடுமாறுதபடி அக்குற்றத்தினின்றும் பேதம் செய்து. ஆன்மா எவ்வெப்பொருளைப்பற்றுமோ அவ்வப்பொருளைப்பற்றி வாழும் இயல்புடையது. உடலும் உலகவாழ்வும், இன்பத்துன்பங்களும், தொடர்பாய்வரும் பிறப்பிறப்புக்களும் இவையெல்லாம் பற்றினால் வந்தன; வருவன. ஆன்மாவுக்குப் பற்று முதல்முதல் ஆணவ மலத்தால் உண்டானது: அது முதற்குற்றம். பின்பு மாயையில் பற்றுண்டாயிற்று: அது இரண்டாவது. அதனடுத்துக் கன்மத்திலே பற்றுண்டாயிற்று. அது மூன்றாங்குற்றம். இந்த ஆணவம் மாயை கன்மங்களால் மற்றப்பற்றுக்கள் எல்லாமும் விளைந்தன. இவைகளாலே ஆன்மாவுக்கு எல்லாத்தீங்குகளும் உள ஆயின. இப் பற்றுக்களை முற்ற ஒழிப்பதாயின் அது எளிதான செய லன்று. மலவலியோ பெரிது. அதனை ஒழித்துக்கொள்ள ஆன்மாவால் என்றும் இயலாது. அதனால்தான் மலத்தாற் சிக்குண்டு பிறப்பிறப்பிலே அகப்பட்டுத் தடுமாறுவதா யிற்று. அம்மலவலி தொலையப் பேராற்றல் படைத்த ஒரு பொருளின் துணைவேண்டும். அப்பொருள் நிர்மலமா யிருந்தாலன்றிப் பயன்படாது. மலவலியாற் பரம்பரையே பெற்ற பிறப்பிறப்புக்களும் பிறப்பிறப்பில்லாத பெரும் பொருளைப்பற்றுவதாலேதான் ஆன்மாக்களுக்கு நீங்குவன வாம். அப்பெரும்பொருளைப் பற்றப் பெறுவதும் ஆசாரிய னுடைய அநுக்கிரகத்தாலேயே கூடும். அவ்வநுக்கிரகமும்

குரு — லிங்க — சங்கம வழிபாட்டாலன்றிப் பெறப்படுதலின்று. ஆகலின், இவையெல்லாம் சிந்தித்துணரவே 'பேதித்து அடியார் அடிமைசெய்ய வழியாட்கொண்ட பெருமானே' என்றார்கள் என்க. தோன்றாப்பொருள்— சிவபெருமான். ஆதித்தியன் — இங்கே ஞான சூரியன் என்க.

5 வழுதி—பாண்டியன்.

9. தூறும் அமணர்—நிறைந்த சமணர். அவர் எண்ணாயிரவர், எண்பெருங் குன்றங்களிலும் உள்ளவர்என்க.

10. கழுது — பேய்.

---

## 9. சிறுபறைப் பருவம்.

---

சிறுபறைப்பருவமாவது பாட்டுடைத்தலைவராகிய குழந்தையைச் சிறுபறை கொட்டும்படி செவிலியர் வேண்டும் பருவம். இது மூன்றாம் ஆண்டில் மொழியப் பெறுவதென்பர்.

2. கிடை — வேதமோதுமிடம்.

3. அழல்வலி தவிர்த்த தமிழ் — திருநள்ளாற்றுப் பதிகம். " தளிரிள வளரொளி ........எரியிடிலிவை பழுதிலை மெய்ம்மையே." என்பதும் முழுதும் முன்னே கூறியது காண்க.

"கனலெங்கனல் அக்கன லால்விளையும்
கார்காரவை வந்து தருங்கழுழிப்
புனலெம்புனல் யாமிடும் ஏடுசுடா
போகாதிரி யக்கொடு போமெனவே." தக்க—209.

என்பது: "பாண்டிய குல மகாதேவி கேளாய். உலகத்தில் அக்கினி யெல்லாம் எங்களக்கினி, அவ்வக்கினியால்

விளைவன மழையானவை; அம்மழைதான் வந்து சொரியும் ஆற்றுநீர்; எங்கள் நீரே. ஆதலால் யாமிடு ஏடு களைச்சுடா அக்கினி; உடன்கொண்டு போகா சலமும்; திரியக்கொண்டுபோமென்று சொல்ல எ-று.'' ''எனவே சொல்லிற்றுச் செய்யும் அக்கினிதேவனும் வருணராசனும் உளர் எங்கட்கு; பரசமயத்தார்க்கெல்லாம் நெருப்பும் நீருமே உள வென வுணர்க'' என்ற அதனுரையும் இங்கே வைத்துணர்க.

5. அவகதியில் உற்று மெலியாமே பிழைத்துச் சிவகதிபெறல்—எந்தச்சமயத்தில் நின்றாலும் முத்தி கிடைக்கும் என்பது கூடாது. ஆன்மா இல்லை என்பவர் ஆன்மாவைப்பெறமாட்டார். கடவுள் இல்லை என்பவரும் கடவுளை அடைதல் இல்லை. மலம் மாயை கன்மம் என்பன இல்லையென்பார் அவைகளின்று நீங்கமாட்டார். எனவே, அவரவர் கூறும் பொருள் நிச்சயத்துக்கு ஏற்பவே ஒழுக்கமும் ஞானமும் பயனும் வெவ்வேறாம். ஆகலின், யாவரும் ஒரேபயனை அடைதலில்லை. அதனால் அந்தந்தச் சமய வரம்பில் நின்று விதிப்படி ஒழுகினாலும் பரமுத்தி கிட்டுவதின்று. வேத வொழுங்கை இகழ்ந்து திரியும் மிலேச்ச மதங்கள் பலவுள. அவை, சரீர தத்துவங்களைப்பற்றி யாவது, கன்ம விளைவுகளைப்பற்றியாவது, இன்பத்துன்ப விளைவுகளைப்பற்றியாவது ஆன்ம இலக்கணம் கடவுள் இலக்கணம் முதலியவைகளைப் பற்றியாவது ஒன்றும் சொல்லமாட்டா. 'சமரசம்' என்னும் பெயரால் எல்லாச் சமயங்களும் ஒன்றே எனக் குழப்புவதும் அறிவுக்குப் பொருந்தாதது. அவையாவும் சித்தாந்த சைவசமய நெறியை அடையச் சோபானங்களாம் எனத் தெளிந்து சித்தாந்தநெறி கடைப்பிடித்தல் ஆம். இதனை,

''செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும், மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள்

எனக் கொண்டே, இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென, உய்வகையாற் பொருள் சிவனென் றருளாலேயுணர்ந்தறிந்தார் " எனவும், "...அல்லார் கண்டர்தமக்கிந்த அகில மெல்லாம் ஆளென்ன, வல்லா ரிவரவ் வேடத்தை மாற்ரு தன்பின் வழிநிற்பார்" எனவும் வரும் பெரிய புராணத் திருவிருத்தங்களான் உணர்க.

6. மிடை — நெருங்கும். மறுகு — தெரு, அளகம் — கூந்தல். முழுமதியம் — பூரண சந்திரன். வதன முளரி — முகதாமரை. முழுமதியம் உலவ முளரியலரும் என்பது ஒரு நயம்.

7. தவன குலபதி — சூரியகுலத்தரசனுகிய சோழன். மகள்—மங்கையர்க்கரசியார். அவனி — பூமி.

8. நெறியில்லாத அமணர் எனவிரிக்க. கருநெறி— பிறப்பில் செலுத்தும் வழி. கவுணியர் - கவுணிய கோத்தி ரோற்பவர். திருநெறி — முத்தி நெறி.

---

## 10. சிறுதேர்ப்பருவம்.

---

சிறுதேர்ப்பருவமாவது பாட்டுடைத்தலைவராகிய குழவியைத் தாயர் சிறுதேர் உருட்டி விளையாடும்படி வேண்டும் பருவம். இது நான்காம் ஆண்டில் நிகழ்வது.

1. கோடு—கிளை. முகிற்படலம் — மேகபடலம். சேடர்—ஆதிசேடன் என்னும் பாம்பும் ஏனைய அட்டமா நாகங்களும். முள்ளியாறு—இப்போது இது வெட்டாறு என வழங்குகிறது. திருக்கொள்ளம்பூதூர் என்னும் தலம் இதன் கரையில் உள்ளது.

2. தானவனுக்கு — இராவணனுக்கு. நக்கவரை — சிரித்தவரை. நட்டுவரை — நடனம் செய்தருளு பவரை, 'அவரவரைக் கூத்தாட்டுபவர்' என்றபடி. கமலத் தவரை — பிரமதேவரை. பாலை நெய்தலாகப்பாடியது திருநனிபள்ளியில்; "காரைகள் கூகைமுல்லை" என்ற முதற் குறிப்புடைய திருப்பதிகம் அது: பண் — பியந்தைக் காந்தாரம். இத்திருப்பதிகம் திருக்கடைக் காப்பில் "ஞானமுனிவன், இடுபறை யொன்ற அத்தர்பியன் மேலிருந்து இன்னிசையாலுரைத்த பனுவல், நடுவிரு ளாடு மெந்தை நனிபள்ளியுள்க வினை கெடுதலாணை நமதே" என்றருளியுள்ளமை சிந்திக்கத்தக்கது. செம் பொனார் கோயிலிலிருந்து 2 - கல் தொலைவில் உள்ளது இத் தலம். உலகுடையாள் — உலக முழுவதையும் தன தடிமையாகவும் உடைமையாகவும் கொண்ட பராசத்தி யாகிய உமாதேவியார்.

3. கயற்கொடி — மீனக்கொடி, இது பாண்டிய அரசர்க்குரியது. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளை நோய்தீர்க்கு மருந்தாகவும், செழுந்தமிழ்வல்லி தழைக்க இருத்திய வேராகவும், எலும்பு உடலாகச் செய்த வேதக ஞராகவும், உண்மையை விளைவித்த வித்தாகவும், கற்பக மாகவும், சரக்கறையாகவும், வழிப்பகையாகவும், கலிகோ பனாகவும் உருவகம் செய்தமை காண்க.

4. சீதளம்—குளிர்ச்சி. நித்திலம்—முத்து. உணர்ந் தருள் மைந்தன் எனத்திருத்துக.

5. மறைக்குருளை — அந்தணர் சிறுவராகிய மார்க் கண்டேயர். கொடியோன்—இயமன். சேவகன்—கால சங்காரக்கடவுள்.

6. அகிற்குறடு—அகிற்கட்டை. படிறு—வஞ்சகம். செரு—போர். இப்பாடல் முதல் 10-ம் பாடல் வரை 'வட்டிவிறை' எனத்திருத்திக் கொள்க. திரு—முத்தித் திரு.

7. உராஅ—முழங்கி. பணை—கிளை. நச்சி—விரும்பி.

8. இத் திருப்பாட்டின் முற்பகுதியில் கூறும் கருத்து நன்கு விளங்கவில்லை. அமண் ஆசு—சமண சமயக்குற்றம். பிற்பகுதியில் திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு அமணர் இழைத்த தீங்குகள் எல்லாம் கூறப்படுவது காண்க.

9. திருமறைக்காட்டில் வேதங்களால் பூட்டப்பெற்ற திருக்கதவம் திறக்கவும் அடைக்கவும் பாடிய அற்புதம் கூறியமை காண்க.

திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ்

குறிப்புரை முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

"வாழ்க வந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

—திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# திருஞானசம்பந்தர்பிள்ளைத்தமிழ்

## செய்யுள் முதற்குறிப்பகராதி.

(எண்—பக்க எண்)

சிவமயம்.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | | |
|---|---|---|
| 4. | அருகத்திரளை | — அருகர்திரளை |
| 6. | விட்டவிடை | — விட்டவுடை |
| 8. | முலையுண்டமுதானை | — முலையுண்டமுதரனை |
| | புகழ்புறவங் | — புகழ்ப்புறவங் |
| 11. | கைநெரித்தருகு | — கைங்நெரித்தருகு |
| 15. | கனிவிரவிய | — களிவிரவிய |
| 21. | மாறன்றுயர்ப்பட்டு | — மாறன்றுயர்பட்டு |
| 22. | வோரோர்செல் | — வேரார்சேல் |
| 24. | கருதியதிரை | — கருகியதிரை |
| 27. | முதலைப்பொங்கு | — முதலைபொங்கு |
| | வாழையடரிற் | — வாழையடியிற் |
| 29. | களிறுமறை | — களிறுமழை |
| 32. | கணுமுலவு | — கணுமுலவ |
| | படிப்பட | — பொடிபடக் |
| 33. | பதியரனனித்தது | — பதியரனளித்தது |
| | புறம்பியமயிலை | — புறம்பயமயிலை |
| 34. | வண்டுறை | — வெண்டுறை |
| | களப்பூர்நணு | — அளப்பூர்நணு |
| 35. | அலையுண்டமரர் | — அலையுண்டமரா |
| | தழலாயிரம்வாய் | — தழலாயிரவா |
| 36. | மானீரரசின் | — மாநீரரிசில் |
| | மிசைத்தாவி | — மிசைதாவி |
| 40. | தளரவோர் | — தளரவே |
| 44. | கவிகைக்கதிர் | — கவிகைகதிர் |
| 45. | சந்த்ராதித்தா | — சந்த்ராதித்தர் |
| | விந்த்ராதிபர் | — விந்த்ராதியர் |

| | | |
|---|---|---|
| 46. | குலைசிதறிப் | — குலைசிதறப் |
| | புனல்புகுந்தும் | — புனல்புகுந்து |
| | திசையின் | — திசையிற் |
| 47. | அரத்துரையின் | — அரத்துறையின் |
| | முனிவர்பணி | — முனிவாபணி |
| | பொருதக்கதிர் | — பொருதககதிர் |
| 49. | யின்முனீர் | — யினமுநீர் |
| 51. | 8 செய் | — 9 செய் |
| 52. | ரிடவகையினிடை | — ரிடவகையினடை |
| 54. | மொருவிசைக் | — மொருவிசை |
| 55. | திருவிசைக்கொத்தவன் | — திருவிசைகோத்தவன் |
| 56. | நரந்தைநாண் | — நரந்தநாண் |
| 60. | சலதியின் கறோர் | — சலதியின் கணொர் |
| 65. | வடியிணை | — வடியினை |
| 69. | யிட்டுந்திநேர் | — யிட்டுநதிநேர் |
| 72. | விருத்தியதோ | — விருத்தியதேர் |
| | தலக்கரிதா | — தமக்கரிதா |
| | ளிணைப்புற | — ளிளைப்புற |
| 73. | வேலைபொழிந்தன | — வேலையொழிந்தன |
| 74. | மருவேகழிக்குவளை | — மருவேய்கழிக்குவளை |
| 75. | வட்டிநிறை | — வட்டினிறை |
| 76. | யானையாச்சனை | — யானையர்ச்சனை |
| 85. | பதிறாயிரம் | — பதினாறாயிரம் |

பருவமுற்றிற்று என்பவைகளைப் பருவம்முற்றிற்று எனத்திருத்தம் செய்க. மற்றும் விட்டுப்போன அச்சுப் பிழைகளையும் குறியீடுகளையும் இங்கே குறிக்கப்படவில்லை. படிப்போர் திருத்திக்கொண்டு படிப்பார்களாக.

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

—ஸ்ரீ திருவள்ளுவநாயனர்.